

வேதப் பொருள் மாறாது
வண்டமிழ் மொழி வழி

# ஸ்ரீ ருத்ரம்

(தமிழ்)

சிறந்த பாராயண நூல்

முதல் பதிப்பு : ஜனவரி, 2008

இரண்டாம் பதிப்பு : அக்டோபர், 2008

தொகுப்பாளர் : அமரர் திரு. ஸி.ஸ்ரீராம் பிஏ. பிஎல்.
12, மே பிளவர் அபார்ட்மெண்ட்ஸ்
438, விவேகானந்தா ரோடு, ராம் நகர்,
கோயமுத்தூர் - 641 009. போன் : 0422 2231523

பதிப்பாளர் & ஓவியர் : திரு. C.N.வெங்கட்ராமன்
112, "ராஜ்நாராயண்", பொன்னையராஜபுரம்,
கோயமுத்தூர் - 641 001. போன் : 0422 2470036

விலை : ரூ.50/-

Printed by :  Shivanjali Printing Works
4, 3rd Street, Sri Nagar, P N Pudur, Coimbatore - 641 041.
Tel : 0422 2436386 email : shivanjali_cbe@yahoo.co.in

## *எங்கள் காணிக்கை . . .*

சகல உலகங்களையும் படைத்து, அதில் வியாபித்திருக்கும், சகல வல்லமை உடையவராகவும், எல்லையில்லா கருணை உடையவராகவும் அனைத்து ஜீவராசிகளையும் ரக்ஷித்து, அருள்பாலிக்கும் சிவபெருமானின் பல நாமங்களில் "ஸ்ரீ ருத்ரன்" ஒன்று. ஸ்ரீ ருத்ரனைப் புகழ்ந்து, அவரது நாமாவை உச்சரித்து, ஸ்ரீருத்ரத்தை சொன்னாலும் கேட்டாலும் செய்த பாவங்கள் நீங்கி, பரிசுத்தம் அடைவர்.

எனது அன்பரும், உறவினருமான சட்ட ஆலோசகர் ஸ்ரீ ஸி. ஸ்ரீராம் அவர்கள் பிரம்மீபூதரான ஸ்ரீ சாம்பசிவ ஐயரின் வழித்தோன்றலான தனது பாட்டனார் ஸ்ரீ A.S. வெங்கடரமணய்யர், தாய்மாமன்கள் ஸ்ரீ A.V. வெங்கடசுப்பன், ஸ்ரீ A.V. கிருஷ்ணமூர்த்தி ஆகியவர்களுடன் புது டில்லியில் இருந்து படித்து அவர்களைப் போல் சமஸ்கிருதம், இந்தி, தமிழ், ஆங்கிலம் மற்றும் பல மொழிகளில் நல்ல பண்டித்தியம் அடைந்தவர். சிறு வயதிலேயே தமிழ் பேரறிஞர் திரு கி.வா.ஜகந்நாதன் மற்றும் சென்னை சமஸ்கிருத கல்லூரி முதல்வர் திரு பாலசுப்ரமணிய சாஸ்திரிகள் ஆகியோருடன் நெருங்கிப் பழகிய வாய்ப்பும் அவருக்கு கிட்டியது. இளம் வயதில் சங்கீத மேதை திரு பாபநாசம் சிவன் அவர்களுடன் தொடர்பிருந்தது. சென்னை, மயிலையில் வேதாத்தியாயன சபையிலும் சிலகாலம் பயிற்சி பெற்றவர். மயிலை பக்த ஜன சபையின் ஆரம்ப அமைப்பாளர்களுள் ஒருவர். கல்லூரிகளுக்கிடையே நடைபெறும் சைவ சித்தாந்த போட்டிகளில் சிறப்பு பரிசு பெற்றவர். ஸ்ரீ ஸ்ரீராம் அவர்களைக் காண சென்ற சமயம், அவர் சம்ஸ்கிருதம் மற்றும் பல மொழிகளிலிருந்து தமிழில் மொழிபெயர்த்த புத்தகங்கள் வைத்திருக்கக் கண்டேன்.

இன்றைய உலகில் மக்கள் நிம்மதியிழந்து வாழ்ந்து வருகிறார்கள். அவர்கள் மன அமைதி பெற சிவபெருமானை வணங்கி வழிபடச் சிறந்த வழி "ருத்ரம்" ஓதுதல் ஆகும். சம்ஸ்கிருதம் தெரியாதவர்கள்கூட அதை தமிழில் சொல்லலாமே என்ற எண்ணத்தில் ஸ்ரீ ஸ்ரீராம் அவர்களிடமிருந்து "ஸ்ரீ ருத்ரம்" தமிழ் மொழி பெயர்ப்பு பாடல்

புத்தகத்தை எடுத்துவந்து, அதனை அச்சேற்றி, புத்தகமாக கொண்டுவர வேண்டும் என்று எண்ணி, கோவை, வடவள்ளியிலுள்ள சிவாஞ்சலி டிரஸ்ட் ஸ்ரீ ரகுராம் அவர்களை அணுகினேன். அவரும் "தமிழ் ருத்ரம்" புத்தக வடிவில் கொண்டுவர இசைந்து, தற்சமயம் புத்தகமாக கொண்டு வந்துள்ளேன். அவருக்கும் சிவாஞ்சலி பிரிண்டிங் பிரஸிற்கும் எங்கள் நன்றி.

ஸ்ரீ ருத்ரம் தமிழ் வடிவில், அதன் மூலத்தின் சுவை சிறிதும் குன்றாது சரிபார்த்து அதன் அமைப்பில் உதவி செய்த தஞ்சாவூர் ஸ்ரீ விஷ்ணுபுரம் ஓய்வுபெற்ற தலைமை ஆசிரியர் ஸ்ரீ R. பட்டாபிராமன் அவர்களுக்கும் எங்கள் நன்றி.

எங்களுக்கு ஊக்கமும், உற்சாகமும் தந்து பேருதவி செய்த கோவை ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் உரிமையாளர் ஸ்ரீ கிருஷ்ணன் அவர்களுக்கு உளமார்ந்த நன்றி. பல் மருத்துவர் ஸ்ரீ S. சுப்ரமணியன், பெங்களூர் C.P. கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியினை தெரிவித்துக் கொள்கிறோம்.

எங்கள் முயற்சி வெற்றியடைய தமது ஆசிகளை அள்ளி வழங்கிய ஸ்ரீ சிருங்கேரி சங்கராச்சாரியார் ஸ்ரீ ஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களுக்கு எங்களது நன்றி கலந்த பக்தியோடு அவரது பொற்பாத கமலங்களில் "ஸ்ரீ ருத்ரம்" தமிழ் புத்தக வடிவினை காணிக்கையாக சமர்ப்பிக்கிறோம்.

கோவை
01-01-2008

**C.N.வெங்கட்ராமன்**
(காப்பி போர்டு - ஓய்வு)
கோயமுத்தூர் - 1.

ஸ்ரீ குருப்யோ நம:



## மீண்டும் எங்கள் காணிக்கை . . .

ஸ்ரீ ருத்ரம் பக்தி மணம் கமழ, இனிய , எளிய தமிழ்பாக்களாக பாசுர வடிவில் மொழிபெயர்த்து, புத்தகமாக ஸ்ரீ சிருங்கேரி சங்கராச்சாரியார் ஸ்ரீ ஸ்ரீ பாரதி தீர்த்த மகாஸ்வாமிகளின் பூரண அனுகிரஹத்துடன் கோவை ராம்நகர் ஸ்ரீ ஐயப்பா பூஜா சங்கத்தில் 13-01-2008 அன்று, ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் ஆதரவில் நடைபெற்றவொரு ஆன்மிக விழாவில் வெளியிட்டோம். அது சமயம் தமிழ்நாடு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை ஆணையர் திரு.பிச்சாண்டி I.A.S அவர்கள் தலைமை வகிக்க, ஆர்ஷ வித்யா குருகுலம் பூஜ்ய ஸ்ரீ தயானந்த சரஸ்வதி சுவாமிகள் "ஸ்ரீ ருத்ரம்" தமிழ் பாசுரத்தை வெளியிட்டார்கள், முதல் பிரதி குமுதம் - ஜோதிடம் ஆசிரியர் திரு.A.M. ராஜா கோபாலன் அவர்கள் பெற்றுக் கொண்டது எங்களுக்கு ஆன்மிக வழிகளில் மேலும் ஈடுபட வைத்தது.

இந்த விழாவும், விழாவில் கலந்து கொண்டவர்களின் ஏகோபித்த மனப்பூர்வமான ஆசிகளும், எங்களை மேலும் ஆன்மிகத்தில் ஈடுபட வைத்தது. எல்லாவற்றிற்கும் மேலாக ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ ஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களின் ஆசிகளுடன் "ஸ்ரீ முகம்" கிடைத்தது நாங்கள் மகாபாக்யமாக கருதுகிறோம்.

முதல் பதிப்பு 1000 பிரதிகளை ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் - கோவை கிளை உரிமையாளர் திரு.கிருஷ்ணன் மூலமாக விற்று கிடைத்த தொகையினை கோவை ராம்நகரிலுள்ள ஸ்ரீராமர் கோவில் மகா கும்பாபிஷேகத்திற்கு அளித்து ஸ்ரீ ராமரின் அருளுக்கு நாங்களும் பாத்திரமானோம். திரு.கிருஷ்ணன் அவர்களுக்கு எங்கள் மனமார்ந்த நன்றி.

இந்த இரண்டாம் பதிப்பு வெளியிட எங்களுக்கு ஆக்கமும், ஊக்கமும், ஆதரவும் அளித்த ஹோமியோபதி டாக்டர் திரு.G.சுரேஷ் அவர்களும், சென்னை திரு வைத்திசுப்ரமணிய ஐயர் அவர்களின் குமாரர் திரு. V.வைத்தியநாதன் அவர்களும், எனது சம்பந்திகள்

சென்னை திரு.V.பரமேஸ்வர ஐயர் அவர்களும், கனடா திரு.S.சிவசுவாமி அவர்களும், என்றும் எங்களுக்கு அருகிலிருந்து ஆதரவு தரும் திரு.K.நடராஜ ஐயர், திருB.S.ஜெயராமன், திருC.G.வெங்கடசுப்பன், திரு. கிருஷ்ணசாமி சன்ஸ், திரு.சந்தானம், திரு.T.S.ஜெயராம் அவர்கள் எங்களது மனமார்ந்த நன்றிக்கு பாத்திரமாகிறார்கள்.

பிரம்மபூதரான அன்னூர் திரு.சாம்பசிவஐயர், திரு. A.S.வெங்கட்-டரமணய்யர், திரு.A.V.வெங்கடசுப்பய்யர் ஆகியவர்களின் வழித்தோன்றலான புதுதில்லி திருA.V.வெங்கட்நாத் அவர்களின் குடும்பத்தாரும் எங்களுக்கு பேருதவி அளித்தது, எங்கள் ஈசன் வழிபாட்டிற்கு துணையாக உள்ளதை மறக்க மாட்டோம்.

இந்த இரண்டாவது பதிப்பை ஸ்ரீ ருத்ரம் - தமிழ் பாசுரம் ஸ்ரீ சிருங்கேரி சங்கராச்சாரியார் ஸ்ரீ ஸ்ரீ பாரதி தீர்த்த மஹாஸ்வாமிகளின் பொற்பாதங்களில் மீண்டும் எங்கள் காணிக்கையாக சமர்ப்பிக்கிறோம்.

**திரு. ஸி. ஸ்ரீராம்**
12, மே பிளவர் அப்பார்ட்மெண்ட்ஸ்
438, விவேகானந்தா ரோடு, ராம் நகர்
கோயமுத்தூர் - 641 001.

**திரு.C.N.வெங்க்ட்ராமன்**
(காப்பி போர்டு - ஓய்வு)
கோயமுத்தூர் - 1.

02-07-2008

ஸ்ரீ குருப்யோ நம:

*உங்களுடன்*

## உளமார்ந்த ஆன்மீக உரையாடல்

அவனருளாலே அவன் தாள் வணங்கி இப்புனித உரையாடலைத் துவக்குகிறேன்.

சைவ வழிபாட்டில் "அலகிலா விளையாட்டுடையார் "என்று வெகுவாய் போற்றப்படும் ஸ்ரீ பரமேஸ்வரனாகிய ஸ்ரீ ருத்ரனுக்கு மிக மிகச் சிறப்பான இடமுண்டு,

ஸ்ரீ ருத்ரனே பகவான். பகவானே ஸ்ரீ பரமேஸ்வரன் எனும் சிவபெருமான். "சிவம்" மங்களத்தைக் குறிக்கும். ஸ்ரீ பரமேஸ்வரன் மங்களத்தை அளிப்பதில் மிகவும் சிறந்தவராக மங்களத்திலும் மங்களத் திருவுருவாக - "சிவதராய" என்று ஸ்ரீ ருத்ரத்தில் போற்றப்படுகிறார்.

ஸ்ரீ பரமேஸ்வரனின் துதியே ஸ்ரீ ருத்ரம். வேதத்தில் ஸ்ரீ ருத்ரம் மிகச் சிறந்தது. ஸ்ரீ ருத்ரத்தின் நடுவில் வரும் "நமசிவாய"என்ற பஞ்சாக்ஷரம் எனும் ஐந்து புனித எழுத்துகள் மிக மிகச் சிறந்த சைவ சமயத்தின் மா மந்திரம்.

ஸ்ரீ ருத்ரம்தான் ஸ்ரீ பரமேஸ்வரனின் வழிபாட்டில் முக்கியமான சாதனம் என, தொன்மைகாலமாக நிர்ணயிக்கப்பட்டு, ஈஸ்வர வழிபாட்டில் தலையாய இடம் பெற்றுள்ளது.

ஸ்ரீ பரமேஸ்வரனைப் போன்ற உருவமுள்ளவர்கள் ஆயிரக்கணக்கான ஸ்ரீ பரமேஸ்வரர்கள் எனும் ஸ்ரீ ருத்ரர்களாக இப்பூமியில் அவரவர்களது புண்ணிய பாபங்களுக்கேற்ப அருள் பாலித்தலும், தண்டனைகளும் அளித்து செயல்பட்டு வருகிறார்கள் என்பது மரபு. எனவேதான் ஸ்ரீ ருத்ரனை "பகவான்"என்று போற்றி ஸ்ரீ ருத்ரத்தைத் துவங்குகிறோம்.

ஐஸ்வர்யம், புகழ், தர்மம், சம்பத்து, ஞானம் மற்றும் வைராக்கியம் என்ற இந்த அரிய குணங்கள் நிரம்பிய நிறைவானவரே "பகவான்" என்று போற்றப்படுபவர். இந்த பகவானான இறைவனைப் போற்றுவதே ஸ்ரீ "ருத்ரம்" என்னும் மிகப் புனித வேத நூல்.

வடமொழியாகிய சமஸ்கிருதம் அறியாதவர்களும், பயிலாதவர்களும் வேத நெறி வழுவாது இப்புனித நூலை பக்தி மணம் கமழ இனிய தமிழ் பாக்களாகத் துதித்து, வேண்டிய நலம் பெற இதுவரை முறையாக எந்தப் பதிப்பும் வந்ததாகத் தெரியவில்லை. தேவாரம், திருவாசகம்போல் ஸ்ரீ ருத்ரத்தைத் தமிழில் துதித்து எண்ணிலாப் பயன்களும், ஈடிலா மங்களங்களும் பெற இப்புனித நூல் ஓர் இறுக்கமான "நூல்"ஏணியாக இருக்கும்.

இனிய தமிழில் வேதப் பொருள் மாறாது ஸ்ரீ ருத்ரத்தை பாடும் பாக்கியம் பெறுவது ஈடிலா புண்ணியத்தை நாடிச் செல்வதற்கே ! ஆன்மீகத் திருத்தொண்டில் தமிழில் இப்புனித முயற்சி ஒரு விலை மதிப்பற்ற வழிகாட்டியாகத் திகழ்ந்தால் அதுவே இப்புனித நூலின் மிகப் பெரிய வெற்றி !

பிரதோஷகாலங்களில், சோம வாரங்களில் மற்றும் மகா சிவராத்திரி போன்ற ஈசனுக்குகந்த திரு நாட்களில் இத் துதிப்பாடல்களை உளமார்ந்த பக்தியுடன் அனுசந்தானம் செய்து வந்தால் ஸ்ரீ ருத்ரன் எனும் ஸ்ரீ பரமேஸ்வரனின் பேரருள் பெற சுலபமான வழி என்பதில் ஐயமில்லை. "பரம்பொருளே உன் தத்ததுவங்கள் யாதென்று யான் அறியேன் ! பரம்பொருளை எங்கெங்கு காணினும் தத்துவம் உனதே எனத் துதிப்பேன் யான்!" என்று வடமொழியில் ஸ்ரீ புஷ்பதந்தன் என்ற மகாகவி பாடியுள்ளார். இந்த அடிப்படையில் உள்ளுணர்வின் அமுதப் பெருக்கென இலக்கண - இலக்கிய வரைமுறைகளுக்கப்பாற்பட்டு தமிழில் இயற்றப்பட்டதே இந் நன்நூல். பரம்பொருளின் தத்துவங்களை பரம்பொருளாகவே உணர்த்துவது தான் இப்புனித முயற்சியின் தலையாய பணி. புண்ணியம் செய்தவர்களின் புகலிடம் இது. அந்த பாக்கியசாலிகள் பெறும் பிறவிப் பெரும் பயனில் கடுகளவேனும் "புல்லுக்கும் மாங்கே பொசியுமாம்" என்பதற்கேற்ப எனக்கும் சிறிது கிடைத்தால் நான் மிகவும் ஆசீர்வதிக்கப்பட்டவன்.

அன்புடன்

ஸி.ஸ்ரீராம்

(தொகுப்பாளர்)

கோவை

01-01-2008



श्री श्री जगद्गुरु शङ्कराचार्य महासंस्थानम्,
दक्षिणाम्नाय श्री शारदापीठम्, शृङ्गेरी

**Sri Sri Jagadguru Shankaracharya Mahasamstanam**

Dakshinamnaya Sri Sharada Peetham, Sringeri - 577 139.

Ref : 545/5852 Camp : SRINGERI Date : 15-01-2008



Sri C.N.Venkatraman,
112, "RAJNARAYANAN"
Ponniahrajapuram,
COIMBATORE - 641 001

தாங்கள் அனுப்பிய லெட்டரும் காணிக்கை ரூபாய் 500-ம் பெற்றுக்கொள்ளப்பட்டு ஸ்ரீ ஸ்ரீ ஜகத்குரு சங்கரச்சார்ய மஹாஸ்வாமிகளின் பாதகமலங்களில் தங்கள் நமஸ்காரங்களுடன் சமர்ப்பிக்கப்பட்டது.

தாங்கள் வெளியிடும் "ஸ்ரீருத்ரம்" தமிழில் பாசுர வடிவில் சிறந்த ஆன்மீக வெளியீடாக வெளிவரவும் இதை படித்து யாவரும் பகவான் ஸ்ரீ பரமேஸ்வரன் அருள்ப்பெற்று வாழ்ந்து வரவும் ஸ்ரீ ஸ்ரீ மஹாஸ்வாமிகள் ஆசீர்வதித்து அருளிய மந்த்ராக்ஷதையும் ஸ்ரீ சாரதா சந்த்ரமௌளீஸ்வரர் ப்ரஸாதமும் இத்துடன் அனுப்பி இருக்கிறோம்.

இப்படிக்கு
(C. KRISHNA BHAT)

Encl:Asirmanthrakshatas and Sri Sharada Archana Prasadams

Phone : 08265-250123 / 250192 Fax : 08265-250792
E-mail : info@sringerisharadapeetham.org Visit us : www.sringerisharadapeetham.org

# பொருளடக்கம்

# கணபதி ஸ்துதி

## ஓம்

கணானாம் த்வா கணபதிகும் ஹவாமஹே

கவிம் கவீனாமுபமச்ர வஸ்தமம்

ஜ்யேஷ்டராஜம் ப்ரம்ஹணாம்

பரஹ்மணஸ்பத

ஆந : ச்ருண்வன்னூதிபி:

ஸீதஸாதனம் ||

ஓம் மஹா கணபதயே நம:

# காப்பு

## ஓம்

அனைத்தமரர் அதிபதியே
அறிஞரின் அறிஞனே
உவமையற்ற ஒளி வடிவே
உயர்ந்தோர்கள் உறைவிடமே
மறவாது செவிமடுக்கும்
மறைகளின் மறையோனே
நின்னருள் அடரொளியில்
நின் காப்புகள் காத்து நிற்க
உள்ளத்தின் உள்ளொளியாய்
உவகையுடன் எழுந்தருள்வீர் !
ஓம் மஹா கணபதியே போற்றி !

# முதல் அனுவாகம்

## ஓம் நமோ பகவதே ருத்ராய

1.1 நமஸ்தே ருத்ர மன்யவ
உதோத இஷவே நம: !
நமஸ்தே அஸ்து தன்வனே
பாஹுப்யா - முத தே நம: ||

1.2 யாத இஷு : சிவதமா
சிவம் பபூவ தே தனு: |
சிவா ஷரவ்யா யா தவ
தயா நோ ருத்ர ம்ருடய ||

1.3 யாதே ருத்ர சிவா தனு-ர-
கோரா பாப காசினீ |
தயா நஸ்-தனுவா சந்தமயா
கிரிசந்தா பிசாகசீஹி ||

1.4 யாமிஷும் கிரிசந்த
ஹஸ்தே பிபர்ஷ்யஸ்தவே |
சிவாங் கிரித்ர தாம் குரு
மாஹிகும்ஸீ:
புருஷஞ் ஜச்த் ||

1.5 சிவேன வசஸாத்வா
கிரிசாச்சா வதாமஸி |
யதாந: ஸர்வமிஜ்ஜகதயக்ஷ்மகும்
ஸுமனா அஸத் ||

# முதல் பகுதி

## ஓம் இறைவனே ருத்ரா போற்றி

1.1 நின் சினம் போற்றி
நின் னம்பு போற்றி
நின் வில் போற்றி
நின் னிரு கரங்கள் போற்றி ||

1.2 நின் னம்பின் பொலிவு போற்றி
நின் வில்லின் பொலிவு போற்றி
நின் பொலிவுடையம்பின்
நல் லமர்விடம் போற்றி
நின் பொலிவுகள் பல நிறைந்த
நன் மங்களங்கள் போற்றி ||

1.3 மருளகற்றும் மறுவற்ற
மறைகளின் இறைவா போற்றி
உள்ளத்தின் தூய்மையே போற்றி
உள்தூய்மையகமே போற்றி
உயர்வான வடிவோன் போற்றி ||
உயர்வளிக்கும் ருத்ரா போற்றி ||

1.4 கயிலையுறை நாதா போற்றி
கவலை துன்பம் அறுப்போன் போற்றி
வில்லம்பு தரிப்போன் போற்றி
வரும் துயர் துடைப்போன் போற்றி
துதிப்போர் மனம் மலர
துணை நின்றருள்வோன் போற்றி ||

1.5 உவகையுடன் உயிரினங்கள்
ஊன்துன்ப மற்று வாழ
நின்னருள் பெறுதல் வேண்டி
நேசமிகு மாந்தரெல்லாம்
மங்கலத் துதிபாடும்
மலைவாழ் மங்கலா போற்றி ||

1.6 அத் யவோ ச த்தி வக்தா
ப்ரதமோ தைவ்யோ பிஷக் |
அஹீகும் ச்ச ஸர்வான்
ஜம்பயன்த் ஸர்வாச்ச
யாது தான்ய: ||

1.7 அஸௌ யஸ் தாம்ரோ அருண
உத பப்ரு: ஸுமங்கல: |
யே சேமாகும் ருத்ரா அபிதோ திக்ஷு |
ச்ருதா ஸஹஸ்ரசோ வை
ஷாகும் ஹேட ஈமஹே ||

1.8 அஸௌ யோ வஸர்ப்பதி
நீலக்ரீவோ விலோஹித: |
உதைனம் கோபா அத்ருசன் -
னத்ருசன் னுதஹார்ய: |
உதைனம் விஸ்வா பூதானி
ஸத்ருஷ்டோ ம்ருடயாதி ந: |

1.9 நமோ அஸ்து நீலக்ரீவாய
ஸஹஸ்ராக்ஷாய மீடுஷே . . . |
அதோயே அஸ்ய ஸ்த்வா நோஹம்
தேப்யோகரந் நம: ||

1.10 ப்ரமுஞ்ச தன்வனஸ்த்வ -
முபயோ - ரார்த்னியோர்ஜ்யாம் |
யாச்சதே ஹஸ்த இஷ்வ:
பரா தா பகவோ வப

1.6 சூழ்ந்துள்ள அல்லல்களால்
சமைந்த இவ்வாழ்வுதனில்
பிறவிப் பிணிதீர்க்கும்
பரமனின் பரமா போற்றி |
அந்தரத்தமரர் பேணும்
ஆற்றலின் அருளே போற்றி ||

1.7 உதயத்தில் செங்கதிரோன்
உழல்கையில் வெங்கதிரோன்
மாலையில் பொன் கதிரோன்
மங்கல ருத்ரா போற்றி |
ஆயிரம் முகங்கள் கொண்ட
அகமகிழ் அழகா போற்றி ||

1.8 நீல வண்ணக் கழுத்துடையோன்
நீள் வான வீதிதனில்
செங்கதி ரொளியுடையோன்
செந்நிற செம்மலே போற்றி |
இடையின மாந்தர்களும்
இடை நெகிழ் மாதர்களும்
இன்புற்றென்றும் நோக்கும்
இறைவா போற்றி போற்றி |
அனைத்துயிர் காணும் ஆதித்தா |
ருத்ரா போற்றி போற்றி ||

1.9 ஆழ் நீலக் கழுத்தோனே
ஆயிரம் கண் படைத்தோனே
வேண்டுவோர் வேண்டும் வரம்
வேண்டும் வரையளிப்போனே |
நின் திருச் சேவடி போற்றி
நின்னடியார் குழாம் போற்றி ||

1.10 நின் வில்லின் னிருநுனி நாண் நீக்கி,
நின் கையிலம்புகள் உள்ளடக்கி
சினம் கனிந்தருள் வழங்கும்
சீர்மிகு இறைவா போற்றி ||

1.11 அவதத்ய தனுஷ்த்வகும்

ஸஹஸ்ராக்ஷ சதேஷுதே |

நிசீர்ய சய்யானாம் முகா

சிவோ ந: ஸுமனாபவ ||

1.12 விஜ்யம் தனு: கபர்தினோ

விசல்யோ பாணவாகும் உத |

அநேஷந் நஸ்யேஷவ

ஆபுரஸ்ய நிஷங்கதி: |

1.13 யாதே ஹேதிர் - மீடுஷ்டம

ஹஸ்தே பபூவ தேதனு: |

தயாஸ்மான் - விஸ்வதஸ்த்வ -

மய க்ஷ்ம யா - பரிப்புஜ ||

1.11 பல கண்கள் படைத்தோனே
பல் லம்புகளுள்ளடங்கும்
உறைவிடம் பல உள்ளோனே
உள் மன மக மலர்ந்து
நின் வில்லின் நாண் கழன்று
நின் அம்பின் கூரகன்று
மறுவற்ற மனம் பூண்டு
மங்கலமே அருள்வாய் போற்றி ||

1.12 நின் வில் நாணற்று
நின் அம்புகள் கூரற்று
அம்புகளற்ற அம்பராத் தூணிகளும்
அமங்கல மற்றதாகி
உள்ளுறையுள் நின்கத்தியும்
உள்ளடங்கி விலகாநின்று
சகலமும் காத்தருளும்
செம்மலாய் சிறப்போன் போற்றி ||

1.13 நானிலத்தில் மக்களெல்லாம்
நல்லகதியே யடைய
நலம் காக்கும் நல்லான் - போற்றி |
நின் படைப் பெருக்கை
தன்னொடு அடங்கப் பெற்று
தாழாது வந்திருந்து
தேவையான நலமறிந்து
தக்கோரை காப்போன் போற்றி |

1.14 நமஸ்தே அஸ்த்வாயு தாயானா -
ததாய த்ருஷ்ணவே |
உபாப்யா முததே நமோ
பாஹுப்யாம் தவதன்வனே ||

1.15 பரிதே தன்வனோ ஹேதி -
ரஸ்மான் வ்ருணக்து விச்வ த: |
அதோய இஷுதிஸ்தவாரே
அஸ்மந் நிதே ஹிதம் ||

1.14 குறிகோள்கள் குறிப்பறிந்து
குற்றேவல் புரிய நிற்கும்
நத்திண்மை வலிவு பொங்கும்
நின்னாயுதங்களனைத்தும் போற்றி |
நின்னிருகரங்கள் போற்றி
நின் வில்லாயுதமும் போற்றி ||

1.15 நீக்கமற்ற துன்பமெங்கும்
நீக்கியெமைக் காத்தருள
நின் வில்லாயுதங்கள் யாவும்
நெடிது நிற்கப் போற்றி போற்றி
பாவப் பகைகள் பலபலவும்
பொல பொலத்து நீங்கிடவே
நின் பாணங்க ளேந்தி நிற்கும்
நின்னம்பராத் தூணி போற்றி ||

# இரண்டாம் அனுவாகம்

2.0 நமஸ்தே அஸ்து பகவன்
விச்வேச் வராய மஹா தேவாய
த்ரயம்பகாய த்ரிபுராந்தகாய
த்ரிகாக்னி காலாய காலாக்னி -
ருத்ராய நீலகண்டாய
ம்ருத்யுஞ்ஜயாய
ஸர்வேஸ்வராய ஸதாசிவாய
ஸ்ரீமன் மஹா தேவாய நமோ

2.1 நமோ ஹிரண்ய பாஹவே
ஸேனான்யே திசாஞ்ச
பதயே நமோ

வ்ருக்ஷேப்யோ ஹரிகேசேப்ய:
பசூனாம் பதயே நமோ

நம ஸஸ்பிஞ்ஜராய த்விஷீமதே
பதீனாம் பதயே நமோ

# இரண்டாம் பகுதி

2.0 வையகத்தின் நாயகனே
வெங்கதிர் ஞானியனே
முக்கண் படைத்தோனே
முப்புர மெரித்தோனே
கால மூன்றும் வென்றோனே
காலங்களை யழித்தோனே
கருநீலக் கழுத்தோனே
காலனையும் கடிந்தோனே
மாபெரும் அமரர்கோனே
மாசிலா அருட்சுடரே
சீர்மிகு மஹா தேவ சதாசிவா
ஸர்வேஸ்வரா போற்றி போற்றி !!

2.1 பொன்னிற பொன்னபரங்ணங்கள்
பூட்டிய கையோன் போற்றி
சேனைகளைச் செலுத்துவோனாய்
சுற்றுமுள்ள திக்கெங்கும்
தானைத் தலைவனாய்க் காக்கும்
தளபதியே போற்றி போற்றி !!

பச்சிலைக் கூந்தலுடையோன்
பசும்தருக்கள் வடிவுடையோன்
அனைத்துயிர்க் காவலனே
அதிபனே போற்றி போற்றி !!

சென்னிறத்தில் மஞ்சளாகும்
சேய்ப்புல் நிறமுடையோன்
வேதங்கள் வழிவகுக்கும்
வேந்தனே போற்றி போற்றி !!

நமோ பப்லு சாய விவ்யா

திேனோன்னானாம் பதயே நமோ

நமோ ஹரிகேசாயோ - பவீதினே

புஷ்டானாம் பதயே நமோ

நமோ பவஸ்ய ஹேத்யை

ஜகதாம் பதயே நமோ

நமோ ருத்ராயாத தாவினே

க்ஷேத்ராணாம் பதயே நமோ

நமோ ஸுதாயாஹந்த்யாய - வனானாம்

பதயே நமோ

இடபமேலமர் வோனே
இடர்கள் பல தொடுத்து
பகைகளை வெல்வோனே
பல்லின உயிர்கட் கெல்லாம்
இரைவடிவா யுள்ளோனே
இறைவா போற்றி போற்றி !!

நரையற்ற கருங் கூந்தல்
நல்மேனியில் மிளிர் திருநூல்
செழுமையின் திருவுருவம்
செல்வனே போற்றி போற்றி !!

வாழ்வெனும் வட்டம் நீக்கி
வரம்பின்றி வழிவகுப்போன்
வையகத்தின் வைகறையோன்
வேந்தனே போற்றி போற்றி !!

துன்பமெலா மென்றென்றுமற
துடைத் தொழிக்கும் ருத்ரனே
நாணிலென்றும் அம்பேற்றி
நலங்காக்கக்கடுகி நிற்பாய்
அனைத்துயிரின் உறைவிடமாய்
ஆள்பவனே போற்றி போற்றி !!

வையகத் தேரில் நின்று
வழிவகுக்கும் சாரதியே
அழிவற்ற ஆற்றலுள்ள
அரியதொரு அருங்கலமே
பசுமை மிகு காடுகளின்
பசு(ம்)பதியே போற்றி போற்றி !!

2.2 நமோ ரோஹிதாய ஸ்த பதயே
வ்ருக்ஷாணாம் பதயே நமோ

நமோ மந்த்ரிணே வாணிஜாய
கக்ஷாணாம் பதயே நமோ

நமோ புவந்தயே வாரிவஸ்க்ருதா
யௌ ஷதீனாம் பதயே நமோ

நம உச்சைர் கோஷாயக் - ரந்தயதே
பத்தீனாம் பதயே நமோ

நம க்ருத்ஸ்ன வீதாய தாவதே
ஸத்வனாம் பதயே நமோ நம :

2.2 வடிவமைப்பில் சென்னிறத்தோன்
வையகமனைதும் காப்போன்
தழைத்தோங்கும் பசுமைகாக்கும்
தாளாளா போற்றி போற்றி !!

ஓதும் வேதம் நான்கினில்
ஒளிந்துள்ள ஒலிவடிவாய்
சொல்லின் ஓசைகளில்
செயல்வடிவாய் வருவோனே
புகயியலாப் புகலிடத்தின்
பரம்பொருளே போற்றி போற்றி !!

காத்தலும் அழித்தலும் ஆக்கலும்
காக்க வகுத்தலும் செய்யும் இறையோனே !
அடியார்களுள் அமரும்
அடியோனே! அருள்வோனே !
உயிர் சத்தின் சக்தியே
உத்தமனே போற்றி போற்றி !!

காத்தருள்வாய் எனக் கதறி அழைப்போரைக்
கடுகி வந்து வினை நீக்கிக் காக்கும் கருணையே !
பகைநீக்கிப் பக்தர்களைப் பன்னிலைகளில்
காக்கும் காவலா !
தரைப்படையில் ஆர்பரிக்கும் தளபதியே
தன் அன்பர்கட்கருளும் தராதிபதியே போற்றி போற்றி !

எதிலும் நிறைத்திருப்போன்
ஏத்தும் அடியார்கள் பின்தொடர்வோன்
நலம்பேணும் நல்லோர்கள்
நாயகனே போற்றி போற்றி !!

# மூன்றாம் அனுவாகம்

3.1 நம: ஸஹமானாய
நிவ்யாதின ஆவ்யாதினீனாம்
பதயே நமோ

நம : ககுபாய நிஷங்கிணே
ஸ்தேநாநாம் பதயே நமோ

நமோ நிஷங்கிண இஷுதிமதே
தஸ்கராணாம் பதயே நமோ

நமோ வஞ்சதே பரிவஞ்சதே
ஸ்தாயூனாம் பதயே நமோ

நமோ நிசேரவே பரிசரயாயா
ரண்யானாம் பதயே நமோ

நம: ஸ்ருகாவிப்யோ
ஜிகாகும் ஸ்த்ப்யோ
முஷ்ணதாம் பதயே நமோ

# மூன்றாம் பகுதி

3.1 பகைமையற்று பணிந்தோரை
பாசமுடன் ஏற்பவனே
தலைவணங்காப் பகைவர்களை
தகர்த்தெறிந்து ஆள்பவனே
அனைத்துப் பிணிகளுக்கும் அதிபதியே
ஆண்டவா போற்றி போற்றி !!

வணங்குதற் கரியோனே
வாளேந்தி நிற்போனே
உள்ளுரையும் கள்வர்களுள்
உயர் கள்வா போற்றி போற்றி !!

அம்புடன் வில்லேந்தி
அம்பராத்தூணி தாங்கும்
அனைத்துக் கொள்ளையரின்
அதிபதியே போற்றி போற்றி !!

வஞ்சகத்தில் மாயவனே
வஞ்சகப் பெம்மானே
நெஞ்சள்ளும் நயவஞ்சக
நாயகனே போற்றி போற்றி !!

உள்ளும் வெளியிலும்
உலவும் உயர்கள்வா !
காடுகள் வாழ் கொள்ளையர்க்கும்
காவலனே போற்றி போற்றி !!

வல்லோரை எதிர்கொள்ளும்
வில்லாயுத வல்லானே
துரத்தும் இடர்களை
துன்புறுத்தத் துணிவோனே
விளைபொருள்கள் களவாடும்
வலியோனே போற்றி போற்றி !!

நமோ ஸிமத்ப்யோ

நக்தஞ் சரத்ப்ய:

ப்ரக்ருந்தானாம் பதயே நமோ

நம: உஷ்ணீஷிணே

கிரிசராய குலுஞ்சானாம்

பதயே நமோ

3.2 நம இஷுமத்ப்யோ

தன்வாவிப்யச்ச வோ நமோ

நம ஆதன் வானேப்ய:

ப்ரதிததானேப் யச்சவோ நமோ

நம ஆயச்சத்ப்யோ

விஸ்ருஜத்ப்யச்ச வோ நமோ

நமோ ஸ்யத்ப்யோ

வித்யத்ப்யச்ச வோ நமோ:

வானேந்தும் வல்லோனே
வலம் வந்து களவாட
நடு இரவில் நடப்போர்க்கு
நாசங்கள் விளைவித்து
அனைத்தும் அபகரிப்போர்க
திபதியே போற்றி போற்றி !!

உடுப்பைத் தலையணியாய்
உடுத்துலா வரும்
மலைமேவும் மலையோனே
மலைக்காடுகள் மற்றும்
பலமனை நில நீச்சல்கள்
பலவும் பறித்தாள
வளைக்கும் வல்லோரின்
வல்லோனே போற்றி போற்றி !!

3.2 அம்புகளை ஏந்திருப்போன்
அதன் வில்லணித்திருப்போன்
பலவடிவம் தரித்தாளும்
பரமனே போற்றி போற்றி !!

வில்லில் நாணேற்றி
விரைவிலம்பு தொடுத்து
விழையும் வில்லார்களின்
வித்தகனே போற்றி போற்றி !!

நெடிது நின்று நாணிழுத்து
நேர்குறி நோக்கிச் சீற
அம்பெய்து வோர்கள்
அதிபனே போற்றி போற்றி !!

எய்த அம்பு குறிபாய்ந்து
எகிறிய குறி பிளந்து
வென்று நிற்கும் வேந்தர்களின்
வேந்தனே போற்றி போற்றி !!

நம ஆஸீநேப்ய:

சயாநேப்யச்ச வோ நமோ

நம ஸ்வபத்ப்யோ

ஜாக்ரத்ப்யச்ச வோ நமோ

நம: திஷ்டத்ப்யோ

தாவத்ப்யச்ச வோ நமோ

நம: ஸபாப்ய: ஸபா

பதிப்யச்ச வோ நமோ

நமோ அஸ்வேப்யோஸ்வ

பதிப்யச்ச வோ நம: ||

அமர்ந்தும் படுத்தும் மற்றும்
அனைத்துமான வடிவே போற்றி போற்றி !!

உறங்கியும் விழித்து மியங்கும்
உணர்வுகளின் வடிவே போற்றி போற்றி !!

அசலனும் சலனுமான
அருள் வடிவே போற்றி போற்றி !!

அவையோராய் அவைத்தலைவராய்
அணிவகுப்பாய் போற்றி போற்றி !!

அசுவப் புரவிகளாய்
அதன்மீதமர்ந்த அதிபதியாய்
பாரெங்கும் பவனிவரும்
பார்த்திபா போற்றி போற்றி !!

# நான்காம் அனுவாகம்

4.1 நம ஆவ்யாதினீப்யோ

விவித்யந்தீப்யச்ச வோ நமோ

நம உகணாப்யஸ்

த்ருகும் ஹதீப்யச்ச வோ நமோ

நமோ க்ருத்ஸேப்யோ

கருத்ஸபதிப்யச்ச வோ நமோ

நமோ வ்ராதேப்யோ

வ்ராதபதிப்யச்ச வோ நமோ

நமோ கணேப்யோ

கணபதிப்யச்ச வோ நமோ

நமோ விரூபேப்யோ

விஸ்வரூபேப்யச்ச வோ நமோ

# நான்காம் பகுதி

4.1 இடர்கள் சூழ்ந்த திக்கெங்கும்
இறைந்துள்ள சக்திகளாய்
வகை வகை இன்னல்களால்
வதை வதைக்கும் சக்திகளாய்
திரண்டு தாக்கும் தீங்குளின்
திகிலுருவே போற்றி போற்றி !!

ஆக்கிக் காத்தருளும்
அருள் மிகு சக்திகளாய்
அழித்துக் களைந்தொழிக்கும்
அவலநிலைச் சக்திகளாய்
அருளற்ற அருள் வடிவின்
அருளாளா போற்றி போற்றி !!

பொங்கும் பேராசைகள் பூக்கும்
பெரும் நெருப்பாய் நிற்போனே
பேராசைப் பெருந்தகையே
பரமனே போற்றி போற்றி !!

பல வாழ்வுப் பாதைகளின்
பல வகுப்புக் கூட்டங்களாய்
வழிநடத்தும் கூட்டங்களின்
வல்லானே போற்றி போற்றி !!

காவல் தெய்வங்களாய்க் காத்து வலம் வரும்
கணங்களெனும் கணக்கறியா கொற்றவராய்
கணங்களின் அதிபதியாய்க் கோலோச்சும்
கோமானே போற்றி போற்றி !!

அழகற்ற வடிவுடையோன்
அழகான வடிவுடையோன்
உருவின் எல்லையற்ற
உயிர்ப்பொறியே போற்றி போற்றி !!

நமோ மஹத்ப்ய:
க்ஷுல்லகேப்யச்ச வோ நமோ

நமோ ரதிப்யோ
ரதேப்யச்ச வோ நமோ

4.2 நமோ ரதேப்யோ
ரதபதிப்யச்ச வோ நமோ

நம: ஸேநாப்ய:
ஸேனானிப்யச்ச வோ நமோ

நம: க்ஷத்ருப்ய:
ஸங்க்ரஹீ த்ருப்யச்ச வோ நமோ

நமஸ்தக்ஷப்யோ
ரதகாரேப்யச்ச வோ நமோ

அறிவுள்ள அற்புதனாய்
அறிவற்ற அற்பனுமாய்
ஊடுருவும் உள்ளுணர்வாய்
உள்ளானே போற்றி போற்றி !!

தேர்கள் பல காக்கும்
தானைத் தலைவர்களாய்
தனக்கென்று ஒன்று மற்ற
தரிசான மனிதர்களாய்
தனித்தனி வுருவெடுக்கும்
தூயவா போற்றி போற்றி !!

4.2 உலவுகின்ற உயிரினத்தின்
உடல் தேரின் சாரதியே
தேர்கள் மற்றவற்றின் திருவுருவே
தானைத் தளபதியே போற்றி போற்றி !!

ஆர்த்தெழும் படையினராய்
அணிவகுக்கும் தலைவர்களாய்
எவரினிலும் எழுந்தருளும்
எம்மானே போற்றி போற்றி !!

தேர்கள் மீதமரும் திறமை மிகு ஓட்டுனராய்
தளர்வின்றிக் கடிதேகி தேர்வடம் பிடிப்போராய்
சலனங்களனைத்தும் ஈர்த்து சாரதியாய் செயலாற்றும்
செம்மைமிகு செம்மலே சித்தனே போற்றி போற்றி !!

கலைமிளிர் மரம் செதுக்கும்
கைவினைக் கலைஞர்களாய்
கண்கவர் தேர் செதுக்கும்
கலைபோற்றும் தச்சர்களாய்
கைவண்ணக் கலைகள் யாவும்
கைத்திறனால் வடிவமைக்கும்
கைக் கெட்டும் கற்பனைக் கெட்டா
கொற்றவா போற்றி போற்றி !!

நம: குலாலேப்ய:
கர்மாரேப்யச்ச வோ நமோ

நம: புஞ்ஜிஷ்டேப்யோ
நிஷாதேப்யச்ச வோ நமோ

நம: இஷுக்ருத்ப்யோ
தன்வக்ருத்ப்யச்ச வோ நமோ

நமோ ம்ருகயப்ய:
ச்வனிப்யச்ச வோ நமோ

நம: ஷ்வப்ய:
ஷ்பபதிப்யச்ச வோ நம: |

இளகும் களிமண் பேணும் குயவர்களாய்
இரும்பின் கைத்திறன் காணும் கருமர்களாய்
சாதிக்கும் தொழில்களின் செயலாளா
செல்வனே போற்றி போற்றி !!

வலைகட்டிப் பறவைகளை
வசம் செய்யும் வேடர்களாய்
வலைவீசி மீன் பிடிக்கும்
வலையாளும் மாந்தர்களாய்
பணிகள் பலவும் பேணும்
பூரணனே போற்றி போற்றி !!

அறிவுத் திறன் சார்ந்து
அம்புகள் வடிப்போராய்
ஆழ்கலையழகுடன்
அரும் வில்கள் சமைப்போராய்
படைப்புத் திறனனைத்தின்
பரம்பொருளே போற்றி போற்றி !!

வலித்திழுக்கும் விலங்குகளின்
வலிமைமிகு வேடர்களாய்
வெறிகொண்ட வேட்டை நாய்கள்
வார் பிடிக்கும் வலியர்களாய்
எல்லாமும் செயவல்ல
எத்தனே போற்றி போற்றி !!

நன்றியுள்ள நாயினமாய்
நாய்களின் நாயகனாய்
நேயத்தில் நனைந்து நிற்கும்
நெறியாளா போற்றி போற்றி !!

# ஐந்தாம் அனுவாகம்

5.1 நமோ பவாய ச

ருத்ரா யச நம:

சர்வாயச

பசுபதயேச நமோ

நீலக்ரீவாயச

சிதிகண்டாயச நம:

கபர்திநேச

வ்யுப்த கேசாயச நம:

ஸஹஸ்ராக்ஷாயச

ஸததன்வனேச நமோ

கிரிசாயச

சிபிவிஷ்டாயச நமோ

மீடுஷ்டமாய

சேஷுமதேச நமோ

ஹ்ரஸ்வாயச

வாமனாயச நமோ

ப்ருஹதேச

வர்ஷீய ஸேச நமோ

# ஐந்தாம் பகுதி

5.1 உலகம் உயிர்த்தெழும் பொறியே போற்றி
உவட்டும் துன்பங்கள் களைவோனே போற்றி !!

பாவங்கள் பொசுக்கும் பரமா போற்றி
படைப்புகளனைத்தின் பதியே போற்றி !!

வண்ண நீலக் கழுத்தோன் போற்றி
வெளிர்கண்ட முடையோன் போற்றி !!

முடிசடையோகியே போற்றி
முடிமழித்த குருவே போற்றி !!

கண்கள் பல்லாயிரம் உள்ளானே போற்றி
கணக்கற்ற வில்கள் உடையோனே போற்றி !!

மலையில் வாழ் மலையோனே போற்றி
மறுவற்ற ஒளிர்கதிரோனே போற்றி !!

அடர் மழை பாய்ச்சும்
கார்முகிலோன் போற்றி
அம்புகளேந்தும்
ஏந்தலே போற்றி !!

கருவின் சிறு உருவே போற்றி
குறுகிய திருவடிவே போற்றி !!

பேருருவில் விரிவாய் போற்றி
பொற்குணங்கள் சேர் பெம்மானே போற்றி !!

வ்ருத்தாயச
ஸம் வ்ருத்வனேச நம: ||

5.2 நமோ அக்ரியாயச
ப்ரதமாயச நம

ஆசவேசா
அஜிராயச நம

ஷீக்ரியாயச
ஷீப்யாயச நம

ஊர்ம்யாயசா
வஸ்வன்யாயச நம

ஸ்ரோதஸ்யாயச
த்வீப்யாயச நம: |

மூப்பற்று முதிர்வோனே போற்றி
மங்கா புகழில் வளர்வோனே போற்றி !!

5.2 ஆதியனாதியாய் சமைந்திருப்போன் போற்றி
அயனாதி அமரர்க்கும் முதல்வா போற்றி !!

உள்ளார்ந்தவனி யெங்குமுள்ளோனே போற்றி
உயிர்த்தெழும் செயல்களில் விரைவோனே போற்றி !!

சலசலக்கும் அருவிகளில்
சங்கமிப்போன் போற்றி
சீர்த்தெழும் வெள்ளத்தில்
சீறிநிற்போன் போற்றி !!

அலைகளாய் ஆர்ப்பரிக்கும்
அற்புதனே போற்றி
ஆழ்நீர் நிலைகளில்
ஆழ்ந்தோனே போற்றி !!

சிறுசிறு ஓடைகளில்
தெளிந்தோனே போற்றி
சூழ்ந்துள்ள தீவுகளில்
திகழ்வோனே போற்றி !!

வ்ருத்தாயச
ஸம் வ்ருத்வனேச நம: ||

5.2 நமோ அக்ரியாயச
ப்ரதமாயச நம

ஆசவேசா
அஜிராயச நம

ஷீக்ரியாயச
ஷீப்யாயச நம

ஊர்ம்யாயசா
வஸ்வன்யாயச நம

ஸ்ரோதஸ்யாயச
த்வீப்யாயச நம: |

மூப்பற்று முதிர்வோனே போற்றி
மங்கா புகழில் வளர்வோனே போற்றி !!

5.2 ஆதியனாதியாய் சமைந்திருப்போன் போற்றி
அயனாதி அமரர்க்கும் முதல்வா போற்றி !!

உள்ளார்ந்தவனி யெங்குமுள்ளோனே போற்றி
உயிர்த்தெழும் செயல்களில் விரைவோனே போற்றி !!

சலசலக்கும் அருவிகளில்
சங்கமிப்போன் போற்றி
சீர்த்தெழும் வெள்ளத்தில்
சீறிநிற்போன் போற்றி !!

அலைகளாய் ஆர்ப்பரிக்கும்
அற்புதனே போற்றி
ஆழ்நீர் நிலைகளில்
ஆழ்ந்தோனே போற்றி !!

சிறுசிறு ஓடைகளில்
தெளிந்தோனே போற்றி
சூழ்ந்துள்ள தீவுகளில்
திகழ்வோனே போற்றி !!

உர்வர்யாய ச

கல்யாய ச நம

ச்லோக்யாய

சா வஸான்யாய ச நமோ

வன்யாய ச

கக்ஷ்யாய ச நம

ச்ரவாய ச

ப்ரதிச்ரவாய ச

6.2 நம ஆசுஷேணாய

சா சுரதாய ச நம:

சூராய

சாவபிந்ததே ச நமோ

வர்மிணே ச

வரூதினே ச நமோ

பில்மினே ச

கவசினே ச நம:

ச்ருதாய ச

ச்ருதஸேநாய ச நம: |

பசும் பயிர் வயல்களின் படர்வோனே போற்றி
பயிர்களில் முதிர்வுரும் முத்தோனே போற்றி !!

மறைகள் போற்றும் மாமணியே போற்றி
மறைகள் முடிவின் மகுடமே போற்றி !!

வண்ணமிகு வனங்களில் வாழ்வோனே போற்றி
வளம் சூழ் தருக்களின் வளர்வோனே போற்றி !!

மொழிகள் முழுமையின் ஒலிவடிவே போற்றி
முன்சென்று பின்திரும்பு மெதிரொலியே போற்றி !!

6.2 ஆர்த்தெழும் படைகளில் அணிவகுப்போன் போற்றி
அதிர்ந்தோடும் தேர்களில் அமர்ந்திருப்போன் போற்றி !!

விம்மியெழும் வீரர்களுள் வீற்றிருப்போன் போற்றி
வன்மைப் பகைவர்களை வருத்துவிப்போன் போற்றி !!

காப்புச் சீருடையணி காவலா போற்றி
காப்பிடமுடை தேரின் கொற்றவா போற்றி !!

தலையுரையணி பூண்ட தலைவனே போற்றி
தற்காப்புடை பேணும் தளபதியே போற்றி !!

மறைகள் நன்கறியும் மங்கலனே போற்றி
மாசற்ற அமரர்குழாம் அதிபதியே போற்றி !!

# ஏழாம் அனுவாகம்

7.1 நமோ துந்துப்யாய

சா ஹனன்யாய ச நமோ

த்ருஷ்ணவே ச

ப்ரம்ருஷாய ச நமோ

தூதாய ச

ப்ரஹிதாய ச நமோ

நிஷங்கிணே

சேஷுதிமதே ச நம :

தீக்ஷ்ணேஷவே ச

ஆயுதினே ச நம:

ஸ்வாயுதாய ச

ஸுதன்வனே ச நம:

ஸ்ருத்யாய ச

பத்யாய ச நம:

காட்யாய ச

நீப்யாய ச நம:

# ஏழாம் பகுதி

7.1 ஒலி முழங்கும் பேரிகை மாறாத வடிவே போற்றி
ஒலி ஒலிக்கக் கலகலக்கு மதன் காரணியே போற்றி !!

போரில் புறங்காட்டாப் பெருந்தகையே போற்றி
பகுத்தறியும் பேராற்றல் பெற்றோனே போற்றி !!

உளவறிந்து உறவாடும் உயர்வித்தகனே போற்றி
உளமார்ந்து நலம் நாடும் நல்லதிபனே போற்றி !!

கைகளில் வாளேந்தும் காவலனே போற்றி
கூரம்புகளுறை சுமை சுமப்போனே போற்றி !!

கூர்த்தம்புகளேந்திக் களிப்போனே போற்றி
கணக்கிலா ஆயுதகிடங் குடையோனே போற்றி !!

சீர்மிகு ஆயுதங்கள் சுமப்போனே போற்றி
சிறந்த வில்லேந்திச் சிறப்போனே போற்றி !!

வழியமைக்கச் சிறுபாதை
வகுத்திடுவாய் போற்றி
வழிகாட்டும் நல்வழியாய்
வகுத்திருப்பாய் போற்றி !!

நீரின் சிறுஓடையிலிருப்போனே போற்றி
நுரைபொங்கும் நீரருவித் திருவுருவே போற்றி !!

ஸூத்யாய ச

ஸரஸ்யாய ச நமோ

நாத்யாய ச

வைசந்தாய ச

7.2 நம கூப்யாய ச

அவட்யாய ச நமோ

வர்ஷ்யாய ச

அவர்ஷ்யாய ச நமோ

மேக்யாய ச

வித்யுத்யாய ச நம:

ஈத்ரியாய ச

ஆதப்யாய ச நமோ

வாத்யாய ச

ரேஷ்மியாய ச நமோ

வாஸ்தவ்யாய ச

வாஸ்துபாய ச

மடுநிறை நீரில் நிறைந்திருப்போன் போற்றி
மாபெரும் நீர்ப்பரப்பின் மாவுருவே போற்றி !!

ஓடும் நதிநீரின் ஒளிருருவே போற்றி
ஒதுங்கும் குளப்பரப்பில் ஒடுங்குவோன் போற்றி !!

7.2 வற்றாத கேணிகளின் உறைவிடமே போற்றி
ஊற்றெடுக்கும் சுனை நீரின் ஊர்புனலே போற்றி !!

பொழியும் மழை நீரின் பெருந்தகையே போற்றி
பொய்க்கும் மேகங்களின் பொய்யுருவே போற்றி !!

அடர் மழை மேகங்களில் ஆர்ப்பரிப்போன் போற்றி
அடிக்கும் மிளிர் மின்னல் அலங்கரிப்போன் போற்றி !!

அற்பசி வானின் அமலனே போற்றி
அடர்மழை கிழிக்கும் அருணனே போற்றி !!

உயிர்த்தெழும் அனைத்துயிரின் உயிர் மூச்சே போற்றி
உயிரொடுங்கும் ஊழிகால ஊடகமே போற்றி !!

மருவி நின்றெதிலு முறை மெய்யனே போற்றி
மனைகாக்கும் வாஸ்து மாபுருஷனே போற்றி !!

# எட்டாவது அனுவாகம்

8.1 நம: ஸோமாய ச
ருத்ராய ச

நமஸ் தாம்ராய ச

அருணாய ச

நம: சங்காய ச

பசுபதயே ச

நம: உக்ராய ச

பீமாய ச

நமோ அக்ரே வதாய ச

தூரேவதாய ச

நமோ ஹந்த்ரே ச

ஹனீயஸே ச

நமோ வ்ருக்ஷேப்யோ

ஹரிகேஸேப்யோ

நமஸ் தாராய

நம: சம்பவே ச

மயோபவே ச

# எட்டாம் பகுதி

8.1 உமையுடனுறை அரனே போற்றி
ஊழ்வினை தகர்க்கும் ருத்ரா போற்றி !!

செக்கர் வான உதயனே போற்றி
சென்னிறம் தீர்த்து ஒளிர்வோனே போற்றி !!

இன்பம் சேர்க்கும் இனியனே போற்றி
இனிதே காக்கும் இறைவா போற்றி !!

கடுகிக் கடிந்தெழும் கனலே போற்றி
கடும் சீற்றத்திகிலுருவே போற்றி !!

எதிர்வரும் இன்னல்கள் துடைப்போன் போற்றி
எட்டிநிற்கும் பகைகளை அழிப்போன் போற்றி !!

கரையும் அனைத்தையும் கரைப்போன் போற்றி
கரைகாணா முடிவை முடிப்போன் போற்றி !!

பசுமைத் தருக்களில் வளர்வோன் போற்றி
பசுமைத் தளிர்களாய் தழைப்போன் போற்றி !!

பிரமனும் பிரணவமும் ஒன்றெனப் பிணையும்
பிரணவமெனும் 'ஓம்'மின் நாதமே போற்றி !!

இம்மைச் சுகத்தையும் யளிப்போன் போற்றி
இனிவரும் மறுமையை மலர்விப்போன் போற்றி !!

நம: சங்கராய ச
மயஸ்கராய ச

நம: சிவாய ச

சிவதராய ச ||

8.2 நம: தீர்த்யாய ச

கூல்யாய ச

நம: பார்யாய ச

அவார்யாய ச

நம: ப்ரதரணாய ச

உத்தரணாய ச

நம: ஆதார்யாய ச

ஆலாத்யாய ச

நம: ஷஷ்ப்யாய ச

பேன்யாய ச

நம: ஸிகத்யாய ச

ப்ரவாஹ்யாய ச ||

நாடும் அனைவர்க்கும் நலமளிப்போன் போற்றி
நலங்கள் என்றென்றும் நல்குவோன் போற்றி !!

நமசிவாய வெனும் மங்கல வடிவே போற்றி
நல் மங்கலத்திலும் மங்கலத்திருவுருவே போற்றி !!

8.2 புனித நதி நீரில் புகுந்தருள்வோன் போற்றி
பொலிவுடன் கரையமர்ந்து பலன்தருவோன் போற்றி !!

அக்கரையில் ஈர்த்தெமை ஆண்டருள்வோன் போற்றி
அக்கரையாய் இக்கரையில் அருள் சுரப்போன் போற்றி !!

கரைகடக்கத் தீதனைதும் களைபவனே போற்றி
கரை சேர்க்கும் மெய்ஞானக் கண்ணுடையோன் போற்றி !!

மறுபிறவிப் பிறப்பின் புகலிடமே போற்றி
மகிழ்வான இவ்வாழ்வுள் மலர்ந்திருப்போன் போற்றி !!

செழுமையான இளம்புல்லில் செழிப்போனே போற்றி
சுழலும் நீர்நுரையுள் சிலிர்ப்போனே போற்றி !!

திட்டான மணற் பரப்பின் திருவுருவே போற்றி
தடம்புரண்டோடி வரும் தண்புனலே போற்றி !!

## ஒன்பதாம் அனுவாகம்

9.1 நம இரிண்யாய ச

ப்ரபத்யாய ச

நம: கிகும் சிலாய ச

க்ஷயணாய ச

நம: கபர்த்தினே ச

புலஸ்தயே ச

நமோ கோஷ்ட்யாய ச

க்ருஹ்யாய ச

நம: தல்ப்யாய ச

கேஹ்யாய ச

நம: காட்யாய ச

கஹ்வரேஷ்டாய ச

நமோ ஹ்ருதய்யாய ச

நிவேஷ்ப்யாய ச

நம: பாகும் ஸவ்யோய ச

ரஜஸ்யாய ச

# ஒன்பதாம் பகுதி

9.1 களர் நிலமேவும் உலர்வுருவே போற்றி
காலபதிக்கத் தடவடிவாய் வருவோனே போற்றி !!

பாறைப் பொட்டல்தனில் படிந்திருப்போன் போற்றி
பயனுடைய நல் நிலமாய் விரிந்திருப்போன் போற்றி !!

வளர்முடி சடையுடை பெம்மானே போற்றி
வாழ்வளிக்க முன்நிற்கும் முன்னவனே போற்றி !!

கறவைவாழ் கூடமதில் காத்திருப்போன் போற்றி
கூடிவாழ் இல்லமதில் இனித்திருப்போன் போற்றி !!

துயில் கொள்ள சுகமான களம் அமைப்போன் போற்றி
தூமணி மாடத்துள் திருவுருவாய்த் திகழ்வோன் போற்றி !!

புக இயலா இடமெங்கும் புகுந்திருப்போன் போற்றி
புறவெளி ஒளிகாணாப் புகலிடமே போற்றி !!

தண்புனல் ஆழ்நீரில் அமிழ்ந்திருப்போன் போற்றி
தூங்குபனி நீரின்மேல் துயிலிருப்போன் போற்றி !!

காண இயலாத்தூசுகளுள் துளைத்திருப்போன் போற்றி
காணும் துகள் துரும்பினிலும் கலந்திருப்போன் போற்றி !!

நம: சுஷ்க்யாய ச
ஹரித்யாய ச

நமோ லோப்யாய ச
உலப்யாய ச

9.2 நம ஊர்வ்யாய ச
ஸூர்ம்யாய ச

நம: பர்ண்யாய ச
பர்ணசத்யாய ச

நமோ பகுரமாணாய ச
அபிக்னதே ச

நம ஆக்கிததே ச
ப்ரக்கிததே ச

நமோ வ: கிரிகேப்யோ
தேவானாகும் ஹ்ருதயேப்யோ

நமோ விக்ஷீணகேப்யோ

நமோ விசின்வத்கேப்யோ

நம ஆனிர்ஹதேப்யோ

நம ஆமீவத்கேப்யா: ||

சுக்கான மரத்துண்டில் சமைந்திருப்போன் போற்றி
சதுப்பான செழுமையிலும் சேர்ந்திருப்போன் போற்றி !!

புல்பூண்டிலாப் பாழ்தரையில் பதிந்திருப்போன் போற்றி
பசும்புல் வெளிப்பரப்பில் படர்ந்திருப்போன் போற்றி !!

9.2 எண்ணற்ற நிலப்பரப்பில் எதிர்கொள்வோன் போற்றி
எண்ணிலா அலைகளுள் எழுந்தருள்வோன் போற்றி !!

கண்கவர் தளிர்களில் கலகலப்போன் போற்றி
குவியும் சருகுகளில் குறுகுறுப்போன் போற்றி !!

ஏந்திய ஆயுதங்கள் எடுத்திருப்போன் போற்றி
ஏவியவையெல்லாம் எடுத்தாள்வோன் போற்றி !!

வகை வகையாய் இன்னல்கள் வகுப்பபோனே போற்றி
வறுத்தெடுக்கும் துயரனைத்தும் வடிப்போனே போற்றி !!

அடியார்க்கு அருள் வழங்கும் ருத்ரனே போற்றி
அமரர்களுள்ளுணரும் ருத்ரா போற்றி !!

அழிவற்ற திருவுருவே ருத்ரா போற்றி !!

அடியார்கள் ஏந்தலேற்கும் ருத்ரா போற்றி !!

அறவே தீதகற்றும் ருத்ரா போற்றி !!

அங்கிங்கெனாதருளும் ருத்ரா போற்றி !!

# பத்தாம் அனுவாகம்

10.1 த்ராபே அந்தஸஸ்பதே
தரித்ரந் நீலலோஹித |
ஏஷாம் புருஷாணா - மேஷாம்
பசூனாம்மா பேர் -
மாரோ மோ ஏஷாம்
கிஞ்ச நாமமத் ||

10.2 யாதேருத்ர சிவாதனூ :
சிவா விச்வாஹ பேஷஜீ |
சிவாருத்ரஸ்ய பேஷஜீ
தயாநோ ம்ருடஜீவஸே ||

10.3 இமாகும் ருத்ராய தவஸே
கபர்தினே க்ஷயத் வீராய
ப்ரபராமஹே மதிம் |
யதா ந: சமஸத் த்விபதே
சதுஷ்பதே விச்வம்
புஷ்டம் க்ராமே
அஸ்மின்னனாதுரம் ||

10.4 ம்ருடாநோ ருத்ரோத நோ
மயஸ்க்ருதி க்ஷயத் - வீராய
நமஸா விதேம தே |
யச்சஞ் ச யோச்ச
மனுராயஜே
பிதா ததஸ்யாம தவ
ருத்ர ப்ரணீதௌ ||

# பத்தாம் பகுதி

10.1 தீதோற்குத் தீதுகள் தரத்தக்க திண்ணுருவே
துதிக்குமடியார்க்குத் தவறாதூண் அளிப்போனே
ஏதுமிலாது யாதுமாகும் ஏற்றமிகு எம்மானே !
எழில்மினிர் செம்மேனி ஏற்ற கருங்கழுத்தோனே
மாக்களும் மாந்தர்களும் மட்டிலா பயமற்று
மாளாது நோயற்ற முழுவாழ்வு தந்தருள்வாயே !!

10.2 மாசற்ற ருத்ரனெனும் மங்கலத் திருவுருவே
மானுட நோய்களுக்கு மாமருந்தாயுள்ளோனே !
அருள்மருந்தாயுடனிருந்து ஆட்கொள்ளும் அறியவனே
அருமருந்தெனப் பிறவிப் பிணிபோக்கும்
அரும்பணியின் பணியாளா !
பந்தமெனும் பெருநோயறுக்கும் பாசமிகு மருத்துவனே !
பேறுபெரும் பெருவாழ்வை பரிவோடருள்வாயே !!

10.3 மாந்தர்களெல்லாம் இன்புற மாக்களெல்லாம் மகிழ்வுற
உயிரினமனைத்தும் செழிப்புற ஊர்மக்களெலாம் நோய்நீங்கி
அறிவின் திருவுருவாய் அணிசடைமுடியோனாய்
ஆழ்மனதில் உள்ளிருத்தி அறிவின் செறிவூட்டி
அருள்வேண்டிங்கிறைஞ்சி அணுகிநிற்கும் எந்தம்மை
அணைத்தெல்லா நலமீந்து அகமகிழ்ந்தருள்வாயே !!

10.4 ஆதி முதல் தந்தையாம் அறம் வளர் மனுபெற்ற
அளவிலா இன்பமும் அல்லலிலாப் பெருவாழ்வும்
நிலையான பேரின்பமுடை நிலையுமடைந்தக மகிழ
நீக்கமற பகைவரின் நிலைதகாக்கும் ருத்ரா
துதித்துமையேற்றுத் தூய்மையாய் அடிபணியும்
தூயனென எமை ஏற்று தயையுடனருள்வாயே !!

10.5 மா நோ மஹாந்த -

முத மா நோ அர்ப்பகம்

மாந உக்ஷந்த - முத

மாந உக்ஷிதம்

மாநோ வதீ: பிதரம்

மோத மாதரம் ப்ரியா மா

நஸ்தனுவோ ருத்ர ரீரிஷ: ||

10.6 மா நஸ்தோகே தநயே மாந ஆயுஷி

மாநோ கோஷு மாநோ அச்வேஷு

ரீரிஷ: | வீரான் மாநோ ருத்ர

பாமிதோரவதீர் - ஹவிஷ் மந்தோ

நமஸா விதேம தே ||

10.7 ஆராத்தே கோக்ன

உதபூர ஷக்னே

க்ஷயத்வீராய ஸும்ந

மஸ்மே தே அஸ்து |

ரக்ஷா சநோ அதிச தேவ

ப்ருஹ்யதாசந:

சர்மயச்சத்விபர்ஹா: ||

10.5 முதிர்வுறும் கருவினில் காத்திருப்போரை
முதிர்வற்ற எம் சின்னஞ்சிறார்களை
முதிர்ந்து வரும் எம் இளம் இனத்தோரை
முதிர்வுற்ற எம் முத்தான மூத்தோரை
எமையீன்ற எம் அருந்தாய் தந்தையரை
எம் இனிதினு மினிதான இப்பூவுடலை
என்றென்று மல்லலொன்று மின்றி
எமதருமை ருத்ரா எமக்கென்றுமருள்வாயே !!

10.6 சூதுவாதறியா எம் ஆண் பெண் சிறியோரை
சீராய்ப் பெற்றுள்ள எம் மருஞ் செல்வங்களை
துன்புறுத்தாது என்றென்றும் உம்மருளால்
துண்டிக்காதெம் வாழ்வை வளமாய் வகுத்தளித்து
எம் ஆவினம் மற்றுமெம் பரியினமனைத்தையும்
எவ்வித இழப்புமிலாது உயர் வாழ்வளித்து
எம்பணிபுரிவோரின் திறமையழியா வண்ணம்
எவ்விதத் தடையுமிலா தொளிர்வுடன் தளிர்வித்து
எம்கைகளேந்தும் மங்களப் பொருள்களேற்று
எம்மோரின் துதியேற்று தீங்ககற்றி அருள்வாயே !!

10.7 அமுதூட்டும் ஆவினத்தின் வளமழித்து
அன்புடை மாந்தர்கள் உயிரழித்து
ஆற்றல்மிகு பணிசெய்வோர் திறனழித்து
ஆர்பரிக்கும் நின்செஞ்சினச் செவ்வுருவம்
தூரததே விலகி நின்று தெளிவுற்று
தணிந்த நின் சினமடங்கித் துன்பமறுத்து
சற்றே எம்மருகில் நின்றணைத் துறவாடி
சலனமிலாப் பேரின்பப் பெருவாழ்வை பின்னளித்து
சுகமளிக்கும் செம்மைமிகு இவ்வாழ்வை முன்னளித்து
சென்னிற வெம்மையற்ற திருவுருவாய் அருள்வாயே !!

10.8 ஸ்துஹிச்ருதம் கர்த்தஸதம்

யுவாநம் ம்ருகந்ந பீமமுபஹத்னு

முக்ரம் | ம்ருடா ஜரித்ரே

ருத்ரஸ்தவா நோ

அன்யந்தே அஸ்மந் -

நிவபந்து ஸேனா: ||

10.9 பரிணோ ருத்ரஸ்ய

ஹேதிர் - வ்ருணக்து

பரித்வேஷஸ்ய

துர்மதி - ரகாயோ: |

அவஸ்திரா மகவத்ப்யஸ்

தனுஷ்வ மீட்வஸ் - தோகாய

தனயாய ம்ருடய ||

10.8 இதயத்தினுள்ளமர்ந்து என்றென்றும் ஒளிர்வோனை
இளமை பூத்தெழில் வடிவாய் என்றென்றும் மிளிர்வோனை
இறை நூல்களுள்ளிருந்து என்றென்றும் அருள்வோனை
இடையறாதென் மனமே என்றென்று மிறைஞ்சாயோ !
அச்சுறுத்தித் தீதிழைக்கும் தீயோரை அழிப்போனே
அஞ்சாது சினம் பொங்கும் சிங்கமெனத் திகழ்வோனே
போற்றித் துதிபாடியா மேத்தேத்தும் ருத்ரனே
பிறந்தழியும் எம் வாழ்வில் அழியாச் சுகமளித்து
அமரர்புடை சூழ எமை விடுவித்துப் பகையோரை
அழித்தொழித் தெமையென்றும் காத்தருள் புரிவாயே !!

10.9 அழித்தொழிக்கு மாற்றல்மிகு ருத்ரா - நின் ஆயுதங்கள்
அணுகாதெமை எப்புறமும் விலகப் பணித்தருளி
சினத்தால் செம்மையுற்று சொல்லெணாத் துயர்தொடுக்க
சிந்தையில் வன்மமேற்றி சிலிர்த்தோங்கும்
நின்சிதையாயெண்ணம்
உம்மிடம் விடைபெற்று உள்ளடங்கி விலகி நின்று
உம் பணி ஏற்போர்க் கெல்லாம் உவகையுடன் வரமளித்து
எம் இனமக்களுக்கும் எம்முடை சேய்களுக்கும்
எல்லையிலா இன்பமீந்து யென்றும் எமக்கருள்வாயே !!

10.10 மீடுஷ்டம சிவதம சிவோ ந:

ஸுமனா பவ |

பரமே வ்ருக்ஷ ஆயுதம்

நிதாய க்ருத்திம் வஸான

ஆசர பிநாகம்

பிப்ரதாகஹி ||

10.11 விகிரித விலோஹித

நமஸ்தே அஸ்து பகவ: |

யாஸ்தே ஸஹஸ்ர - ஹேதயோன்ய

மஸ்மந்நிவ பந்து தா: ||

10.12 ஸஹஸ்ராணி ஸஹஸ்ரதா

பாஹுவோஸ் தவ ஹேதய: |

தாஸா - மீ சானோ பகவ:

பராசீனா முகா க்ருதி ||

10.10 அடியார்களுளம் அறிந்து அனைத்தும் அளிப்போனே
ஆழ்மனத் தூய்மையுடன் அவர்கட்கருள்வோனே
நலமளிக்கும் திருவுருவாய் நன்மனமுடையோனாய்
நிலைகொண்டு நின் ஆயுதங்கள் நீக்கி
உயர்மரத்தின் உச்சியில் உள்வைத்து
உடுத்திய புலித்தோலோடும் வில்லாயுதமேந்தி
அழகாய் அலங்கரித்த ஆனந்தக் கோலமேற்று
அருகில் வந்தெமையென்றும் ஆட்கொண்டருள்வாயே !!

10.11 கணக்கற்ற ஆயுதங்களேற்றுக் களம்நிற்கும் காவலனே
கடும் பகையினம் களைந்து காத்தருளியெமையேற்று
எம்தீதுகள் யாவையும் எரித்தொழித்தழிவித்து
எழில் பொங்கும் சோதியாய் என்றும் நிர்மலனாய்
எமை ஈர்த்தருள் சுரக்கும் ஈசனாய்
எம்போற்றிகளேற்று என்றென்றும் அருள்வாயே !!

10.12 எண்ணிலா வடிவுதனில் எண்ணற்ற ஆயுதங்கள்
ஏவும் ஆற்றலுடன் ஏந்தி நின்கரங்கள் நிற்க
அவற்றையெலாம் விலக்கி யெமை யணுகா வண்ணம்
ஆட்கொண்டெமை யேற்று அகமகிழ்ந்தருள்வாயே !!

# பதினொராம் அனுவாகம்

11.1 ஸஹஸ்ராணி ஸஹஸ்ரசோயே
ருத்ராபுதி பூம்யாம் |

தேஷாகும் ஸஹஸ்ரயோஜனேவ

தன்வானி தன்மஸி ||

11.2 அஸ்மின் மஹத்யர்ணவே -

ந்தரிக்ஷே பவா அதி ||

11.3 நீலக்ரீவா: சிதிகண்டா:
சர்வா அத: க்ஷமாசரா: ||

11.4 நீலக்ரீவா: சிதிகண்டா

திவகும் ருத்ரா உபச்ரிதா: ||

# பதினொராம் பகுதி

11.1 எண்ணற்ற வகையினராய் எண்ணிலா வடிவினராய்
எங்கெங்கும் புவிமீது எதிர்கொள்ளும் ருத்ரர்களாய்
அகிலத்தில் எல்லாமாய் அங்கிங்கெனாது எங்கும்
அணிவகுக்கும் அற்புதனே! அன்புடன் எமையாள
ஏந்திய வில்லாயுதங்கள் எவற்றிலும் நாணகற்றி
எல்லையற்ற எல்லைக்கப்பால் எட்டிவைத்தருள்வாயே !!

11.2 நீல வண்ண நீள் வானில் நீர்நிறை நீள் கடலில்
நின்றேகும் பணியேற்று நிறைந்தொளிரும் ருத்ரர்களாய்
அகிலத்தில் எல்லாமாய் அங்கிங்கெனாது எங்கும்
அணிவகுக்கும் அற்புதனே! அன்புடன் எமையாள
ஏந்திய வில்லாயுதங்கள் எவற்றிலும் நாணகற்றி
எல்லையற்ற எல்லைக்கப்பால் எட்டிவைத்தருள்வாயே !!

11.3 பகுதிவெளிர் கருமையுடன் பகிர்ந்தமென் கழுத்தோராய்
பூமியுள் ஆழ்தளத்தில் பணியாற்றும் ருத்ரர்களாய்
அகிலத்தில் எல்லாமாய் அங்கிங்கெனாது எங்கும்
அணிவகுக்கும் அற்புதனே! அன்புடன் எமையாள
ஏந்திய வில்லாயுதங்கள் எவற்றிலும் நாணகற்றி
எல்லையற்ற எல்லைக்கப்பால் எட்டிவைத்தருள்வாயே !!

11.4 இணைந்த வெண் கருமையுடை இருபகுதிக் கழுத்தோராய்
இணையிலா மேலுலகின் இணைந்துலவும் ருத்ரர்களாய்
அகிலத்தில் எல்லாமாய் அங்கிங்கெனாது எங்கும்
அணிவகுக்கும் அற்புதனே! அன்புடன் எமையாள
ஏந்திய வில்லாயுதங்கள் எவற்றிலும் நாணகற்றி
எல்லையற்ற எல்லைக்கப்பால் எட்டிவைத்தருள்வாயே !!

11.5 யே வ்ருக்ஷேஷு ஸஸ்பிஞ்ஜரா
நீலக்ரீவா விலோஹிதா: ||

11.6 யே பூதானாம் அதிபதயோ
விசிகாஸ கபர்த்தின: ||

11.7 யே அன்னேஷு விவித் த்யந்தி
பாதரேஷு பிபதோ ஜனான்: ||

11.5 இளமைப் பசும் புல்லின் இளம் பச்சை நிறமேற்று
இயற்கையாய் தருக்களில் இயங்கும் இயல்பினராய்
செழுநீலக் கழுத்தோராய் செம்மேனி படைத்தோராய்
அகிலத்தில் எல்லாமாய் அங்கிங்கெனாது எங்கும்
அணிவகுக்கும் அற்புதனே ! அன்புடன் எமையாள
ஏந்திய வில்லாயுதங்கள் எவற்றிலும் நாணகற்றி
எல்லையற்ற எல்லைக்கப்பால் எட்டிவைத்தருள்வாயே !!

11.6 சகலோர்க்கு மதிபதியாய் சடைமுடியுடையோராய்
அற்ற முடியற்றோராய்
அகிலத்தில் எல்லாமாய் அங்கிங்கெனாது எங்கும்
அணிவகுக்கும் அற்புதனே! அன்புடன் எமையாள
ஏந்திய வில்லாயுதங்கள் எவற்றிலும் நாணகற்றி
எல்லையற்ற எல்லைக்கப்பால் எட்டிவைத்தருள்வாயே !!

11.7 அருந்தும் உணவில் கலந்ததன் தம் கலங்கள் மேவி
அனைத்திடரும் தருவோராய் பருகும் பானங்களில்
பருகும தன் கலங்களில் பாங்காய்ப் பதிந்ததனில்
பிணிசேர்க்கும் ருத்ரர்களாய்
அகிலத்தில் எல்லாமாய் அங்கிங்கெனாது எங்கும்
அணிவகுக்கும் அற்புதனே! அன்புடன் எமையாள
ஏந்திய வில்லாயுதங்கள் எவற்றிலும் நாணகற்றி
எல்லையற்ற எல்லைக்கப்பால் எட்டிவைத்தருள்வாயே !!

11.8 யே பதாம் பதிரக்ஷய

ஐலப்ருதா யவ்யுத: ||

11.9 யே தீர்த்தானி ப்ரசரந்தி

ஸ்ருகாவந்தோ நிஷங்கிண: ||

11.10 ய ஏதாவந்தச்ச

பூயாகும் ஸச்ச திசோ

ருத்ரா விதஸ்திரே |

தேஷாகும் ஸஹஸ்ர - யோஜனேவ

தன்வானி தன்மஸி ||

11.8 இவ்வாழ்வின் புறத்தடத்தில் இறை தேடு மகத்தடத்தில்
இன்னபிற வழித்தடத்தில் இடரகற்ற வல்லவராய்
பசித்தோர்க் குணவளித்துப் பிணியாற்றும் பண்புளராய்
பகையோர்கள் பலமிழக்க போர்தொடுக்கும் காவலராய்
அகிலத்தில் எல்லாமாய் அங்கிங்கெனாது எங்கும்
அணிவகுக்கும் அற்புதனே! அன்புடன் எமையாள
ஏந்திய வில்லாயுதங்கள் எவற்றிலும் நாணகற்றி
எல்லையற்ற எல்லைக்கப்பால் எட்டிவைத்தருள்வாயே !!

11.9 கூராயுதங்களேந்தி கூர்மிகு வாளேந்தி
காலமெல்லாம் கரைகள்மீது காவலராய்க் காத்து நின்று
புனித நீர் நிலயந் தோறும் பாலிக்கும் பணியேற்று
பொறுப்புடன் தொண்டாற்றும் பெருமைமிகு ருத்ரர்களாய்
அகிலத்தில் எல்லாமாய் அங்கிங்கெனாது எங்கும்
அணிவகுக்கும் அற்புதனே! அன்புடன் எமையாள
ஏந்திய வில்லாயுதங்கள் எவற்றிலும் நாணகற்றி
எல்லையற்ற எல்லைக்கப்பால் எட்டிவைத்தருள்வாயே !!

11.10 பணிந்தோர் துதியேற்கும் பரிவுடை பெருந்தகையாய்
பரவியெத் திசையெங்கும் பற்பல ருத்ரர்களாய்
அகிலத்தில் எல்லாமாய் அங்கிங்கெனாது எங்கும்
அணிவகுக்கும் அற்புதனே! அன்புடன் எமையாள
ஏந்திய வில்லாயுதங்கள் எவற்றிலும் நாணகற்றி
எல்லையற்ற எல்லைக்கப்பால் எட்டிவைத்தருள்வாயே !!

11.11 நமோ ருத்ரேப்யோ
யே ப்ருதிவ்யாம்

யேந்தரிக்ஷே

யே திவி யேஷாமன்னம்

வாதோ வர்ஷ - மிஷவஸ்

தேப்யோ தச - ப்ராசீர்

தச தக்ஷிணா தசப்ரதீசீர்

தசோதீசீர்

தசோர்த்வாஸ் - தேப்யோ

நமஸ்தே நோ ம்ருடயந்து - தே

யம் த்விஷ்மோ

யச்ச நோ த்வேஷ்டி தம் - வோ

ஜம்பே ததாமி: ||

11.11 உணவே காரணியாய் உடன்கொணடிவ் வுலகெங்கும்

ஊறுதோன்ற ஊடுருவி உலாவரும் ருத்ரர்களாய்

உழல்காற்றே காரணியாய் உடனேற்று அந்தரத்தில்

ஊறு தோன்ற ஊடுருவி உலாவரும் ருத்ரர்களாய்

சரமழையே காரணியாய் சார்ந்தேற்று வானுலகில்

சொல்லொணா ஊறு தோன்ற செயலாற்றும் ருத்ரர்களாய்

செய்தொழில் பலவேற்று செயலுருவாய் வருவோனே !

சிரம்தாழ்த்தி யென்றென்றும் சீரடி பணிவோம்யாமே !!

பத்து விரல்கள் குவித்து பணிவுடன் கீழ்திசையில்

பத்து விரல்கள் குவித்து பணிவுடன் தென் திசையில்

பத்து விரல்கள் குவித்து பணிவுடன் மேல் திசையில்

பத்து விரல்கள் குவித்து பணிவுடன் வட திசையில்

பத்து விரல்கள் குவித்து பணிவுடன் வான் திசையில்

பற்பல ருத்ரர்களை பல்வகையாய்ப் போற்றுவோம்

போற்றுவோம் !

இசையாதெம் மனதால் யாமெதிர்க்கும் தீதுகளை

இன்னல்கள் பல தந்து யெமை எதிர்க்கும் தீதுகளை

இல்லாதொழிக்க உம்முள் இவையெல்லாம் ஈர்த்து

இன்பமெல்லாம் எமக்களிக்க யாமுமைப் போற்றுவோம்

போற்றுவோம் !!

# பிரார்த்தனை

11.12 த்ரயம்பகம் யஜாமஹே

ஸுகந்திம் புஷ்டி வர்த்தனம்

உர்வாருக மிவ பந்தனான்

ம்ருத்யோர் முக்ஷீய மாம்ருதாத் ||

ஓம் சாந்தி சாந்தி சாந்தி:

சிவார்ப்பணம்

சிவ சிவ

ஓம்

# வேண்டுதல்

11.12 நல் முகத்தில் முக்கணேற்று
நல்லுடலில் செழுமையேற்று
நல்லியற்கை நாற்றமேற்று
நல்லடியார் வளர்ப்போனே
நல்வெள்ளரி முற்றிகாம்பினிற்று
நலியாது நிலைக்குமாப் போல்
நீணில மதனில் நாடும் ஆசையை
நாளும் முறையாக நீக்கி வாழ்ந்து
நமனின் பிடி நழுவி நின்னருளால்
நலியா தென்றென்றும்
நீக்கமற நிகரற்ற
நலியாப் பெருவாழ்வடைய
நன்னெஞ்சில் உமைநிறுத்தி
நன் நாவில் உமைத்துதித்து
நல்லுடலால் உமை வணங்கி
நல்சித்தி பெறுவோம்யாமே!

ஓம் சாந்தி சாந்தி சாந்தி:

சிவார்ப்பணம்

சிவ சிவ

ஓம்

|| ஓம் நமோ பகவதே ருத்ராய ||

நமஸ்தே ருத்ர மன்யவ உதோத இஷ்வே நம: ।
நமஸ்தே அஸ்து தன்வனே பாஹுப்யாமுததே
நம: । யாத இஷு சிவதமா சிவம் பபூவ தே தனு: ।
சிவா ஷரவ்யா யா தவ தயா தோ ருத்ர ம்ருடய ।
யாதே ருத்ர சிவா தனூரகோரா பாப காசினீ । தயா
நஸ்தனுவா சந்தமயா கிரிசந்தா பிசாகசீஹி । யாமி
ஷும் கிரிசந்த ஹஸ்தே பிபர்ஷ்யஸ்தவே । சிவாங்
கிரித்ரதாம் குரு மா ஹிகும்ஸீ : புருஷஞ் ஜகத் ।
சிவேன வசஸா த்வா கிரிசாச்சா வதாமஸி । யதா நஸ்
ஸர்வமிஜ்ஜக-தயக்ஷ்மகும் ஸுமனா அஸத் ।
அத்த்ய வோச-ததி வக்தா ப்ரதமோ தைவ்யோ
பிஷக் । அஹீகும்ஸ்ச ஸர்வாஞ் ஜம்பயன்த் ஸர்வாச்ச
யாது தான்ய: | அஸௌ யஸ்தாம்ரோ அருண உத
பப்ருஸ் ஸுமங்கல: । யே சேமாகும் ருத்ரா அபிதோ
திக்ஷு ஸ்ரிதாஸ் ஸஹஸ்ரசோவைஷாகும் ஹேட

ஈமஹே । அஸெள யோ வஸர்ப்பதி நீல்க்ரீவோ

விலோஹித:। உதைநங் கோபா அத்ருசந் நத்ருசன்

னுதஹார்ய: । உதைநம் வ்விஸ்வா பூதானி

ஸத்ருஷ்டோம்ருடயாதி ந: । நமோ அஸ்து

நீல்க்ரீவாய ஸஹஸ் ராக்ஷாய் மீடுஷே । அதோயே

அஸ்ய ஸத்வா னோஹன்தேப்யோரகரந் நம: ।

ப்ரமுஞ்ச தன்வனஸ்த்வ - முபயோ - ரார்த்னியோர்-

ஜ்யாம் । யாஷ்சதே ஹஸ்த இஷ்வ : பராதா பகவோ

வப । அவதத்ய தனுஸத்வகும் ஸஹஸ்ராக்ஷ

ஷதேஷுதே । நிஷீர்ய் சல்யானாம் முகா சிவோ

நஸ் ஸுமனா பவ । விஜ்யந் தனு: கபர்திநோ

விஷல்யோ பாண்வாகும் உத । அனேஷன்

னஸ்யேஷ்வ ஆபுரஸ்ய நிஷங்கதி: । யாதே

ஹேதிர் - மீடுஷ்டம ஹஸ்தே பபூவ தே தனு: ।

தயாஸ்மான்-விஸ்வதஸ்-த்வ-மய்க்ஷ்ம யா -

பரிப்புஜ । நமஸ்தே அஸ்த்வாய்யு தாயான்னாததாய

வஞ்சதே பரிவஞ்சதே ஸ்தாயூனாம் பதயே நமோ
நமோ நிசேரவே பரிசரயாயாரண்யானாம் பதயே
நமோ நமஸ் ஸ்ருகாவிப்யோ ஜிகாகும் ஸத்ப்யோ
முஷ்ணதாம் பதயே நமோ நமோ ஸிமதப்யோ
நக்தஞ் சரத்ப்ய: ப்ரக்ருந்தானாம் பதயே நமோ
நம உஷ்ணீஷிணே கிரிசராய குலுஞ்சானாம்
பதயே நமோ நம இஷுமதப்யோ தன்வாவிப்யச்ச
வோ நமோ நம ஆதன் வானேப்ய: ப்ரதிததானேப்
யச்சவோ நமோ நம ஆயச்சத்ப்யோ விஸ்ரு
ஜத்ப்யச்ச வோ நமோ நமஸ் ஸ்யத்ப்யோ
வித்யத்ப்யச்ச வோ நமோ நம ஆஸீனேப்ய:
ஷயானேப்யச்ச வோ நமோ நம ஸ்ஸ்வபத்ப்யோ
ஜாக்ரத்ப்யச்ச வோ நமோ நமஸ் திஷ்டத்ப்யோ
தாவத்ப்யச்ச வோ நமோ நமஸ் ஸபாப்யஸ்
ஸபாபதிப்யச்ச வோ நமோ நமோ அஸ்வேப்
யோஸ்வ பதிப்யச்சவோ நம: ||

நம் ஆவ்யாதினீப்யோ விவித்யந்தீப்யச்ச

வோ நமோ நம உக்ணாப்யஸ் த்ருகும் ஹதீப்யச்ச

வோ நமோ நமோ க்ருத்ஸேப்யோ க்ருத்ஸ

ப்திப்யச்ச வோ நமோ நமோ வ்ராதேப்யோ

வ்ராத்பதிப்யச்ச வோ நமோ நமோ கணேப்யோ

கணப்திப்யச்ச வோ நமோ நமோ விரூபேப்யோ

விஸ்வரூபேப்யச்ச வோ நமோ நமோ மஹத்ப்ய:

க்ஷுல்லகேப்யச்ச வோ நமோ நமோ ரதிப்யோ

ரதேப்யச்ச வோ நமோ நமோ ரதேப்யோ

ரத்பதிப்யச்ச வோ நமோ நமஸ்ஸேனாப்யஸ்

ஸேனானிப்யச்ச வோ நமோ நம: க்ஷத்ருப்யஸ்

ஸங்க்ரஹீ த்ருப்யச்ச வோ நமோ நமஸ் தக்ஷப்யோ

ரதகாரேப்யச்ச வோ நமோ நம: குலாலேப்ய:

கர்மாரேப்யச்ச வோ நமோ நம: புஞ்ஜிஷ்டேப்யோ

நிஷாதேப்யச்ச வோ நமோ நம் இஷுக்ருத்ப்யோ

தன்வக்ருத்ப்யச்ச வோ நமோ நமோ ம்ருகயுப்ய

ச்வனிப்ய்ச்ச வோ நமோ நமஸ் ஷ்வப்யு:

ஷ்வப்திப்யச்ச வோ நம்: ||

நமோ புவாய் ச ருத்ராய ச் நம்ஸ் ஷர்வாய் ச பசுபதயே சநமோ நீல்க்ரீவாய ச சிதிகண்ட்டாயச நம்: கபர்தினே ச வ்யுப்த கேசாய ச நம்ஸ் ஸஹஸ்ராக்ஷாய் ச ஷதத்ன்வனேச நமோ கிரிசாய் ச சிபிவிஷ்டாய் ச நமோ மீடுஷ்டமாய சேஷுமதே ச நமோ ஹ்ரஸ்வாய் ச வாமனாய் ச நமோ ப்ருஹதே ச வர்ஷீயஸே ச நமோ வ்ருத்தாய் ச ஸம் வ்ருத்வ்னே ச நமோ அக்ரியாய ச ப்ரதமாய் ச நம ஆசவேசாஜிராய் ச நம ஷீக்ரியாய ச ஷீப்யாய ச நம் ஊர்ம்யாய சாவஸ்வன்யாய ச நம் ஸ்ரோதஸ்யாய சத்விப்யாய ச ||

நமோ ஜேஷ்டாய் ச கனிஷ்டாய் ச நம: பூர்வஜாய் சாபரஜாய ச நமோ மத்யமாய்

சாபதல்பாய் ச நமோ ஜகன்யாய ச புத்னியாய ச நம்

ஸோப்யாய ச ப்ரதிஸர்யாய ச நமோ யாம்யாய ச

க்ஷேம்யாய ச நம் உர்வர்யாய ச கல்யாய ச நம

ச்லோக்யாய சாவஸான்யாய ச நமோ வன்யாய ச

கக்ஷ்யாய ச நம் ச்ரவாய ச ப்ரதிச்ரவாய் ச நம்

ஆசுஷேணாய சாசுரதாய ச நம சூராய சாவ

பிந்ததே ச நமோ வர்மிணே ச வரூதினே ச நமோ

பில்மினே ச கவசினே ச நமஸ் ச்ருதாய் ச

ச்ருதஸேனாய்ச நம: ||

நமோ துந்துப்யாய சாஹனன்யாய ச நமோ த்ருஷ்ணவே ச ப்ரம்ருஷாய ச நமோ தூதாய ச ப்ரஹிதாய ச நமோ நிஷங்கிணே சேஷுதிமதே ச நமஸ்-தீக்ஷணேஷவே ச சாயுதினே ச நமஸ் ஸ்வாயுதாய ச ஸுததன்வனே ச நமஸ் ஸ்ருத்யாய ச பத்யாய ச நம: காட்யாய ச நீப்யாய ச நமஸ்

ஸூத்யாய ச ஸரஸ்யாய ச நமோ நாத்யாய ச

வைசந்தாய ச நம: கூப்யாய சாவட்யாய ச நமோ

வர்ஷ்யாய சாவர்ஷ்யாய ச நமோ மேக்யாய ச

வித்யுத்யாய ச நம: ஈத்ரியாய சாதப்யாய ச நமோ

வாத்யாய ச ரேஷ்மியாய ச நமோ வாஸ்துவ்யாய ச

வாஸ்துபாய ச |

நமஸ் ஸோமாய ச ருத்ராய ச நமஸ் தாம்ராய

சாருணாய ச நமஸ சங்காய ச பசுபதயே ச நம

உக்ராய ச பீமாய ச நமோ அக்ரே வதாய ச

தூரேவதாய ச நமோ ஹந்த்ரே ச ஹனீயஸே ச

நமோ வ்ருக்ஷேப்யோ ஹரிகேஸேப்யோ நமஸ்

தாராய நமஸ் சம்பவே ச மயோபவே ச நமஸ்

சங்கராய ச மயஸ்கராய ச நமஸ சிவாய ச

சிவதராய ச நமஸ் தீர்த்யாய ச கூல்யாய ச நம:

பார்யாய சாவார்யாய ச நம: ப்ரதரணாய

சோத்தர்ணாய ச நம ஆதார்யாய சாலாத்யாய ச

நமஸ் ஸஷ்ப்யாய ச பேன்யாய ச நமஸ் ஸிகத்யாய ச ப்ரவாஹ்யாய ச ||

நம இரிண்யாய ச ப்ரபத்யாய ச நம: கிகும் சிலாய ச க்ஷயணாய ச நம: கபர்த்தினே ச புலஸ்தயே ச நமோ கோஷ்ட்யாய ச க்ருஹ்யாய ச நம: தல்ப்யாய ச கேஹ்யாய ச நம: காட்யாய ச கஹ்வரேஷ்டாய ச நமோ ஹ்ருதய்யாய ச நிவேஷ்ப்யாய ச நம: பாகும் ஸவ்யோய ச ரஜஸ்யாய ச நம: சுஷ்க்யாய ச ஹரித்யாய ச நமோ லோப்யாய சோலப்யாய ச நம ஊர்வ்யாய ச ஸூர்ம்யாய ச நம: பர்ண்யாய ச பர்ணசத்யாய ச நமோ பகுரமாணாய சாபிக்னதே ச நம ஆக்கிததே ச ப்ரக்கிததே ச நமோ வ: கிரிகேப்யோ தேவானாகும் ஹ்ருதயேப்யோ நமோ விக்ஷீண கேப்யோ நமோ விசின்வத்கேப்யோ நம ஆநிர்ஹதேப்யோ நம ஆமீவத்கேப்ய: |

த்ராபே அந்த்ஸஸ்பதே தரித்ரந் நீலலோஹித |
ஏஷாம் புருஷாணா மேஷாம் ப்சூனாம் மாபேர்
மாரோ மோ ஏஷாம்கிஞ்ச நாம்மத் | யாதே ருத்ர
சிவாதனூ: சிவா விச்வாஹ போஷஜீ |
சிவாருத்ரஸ்ய் பேஷஜீ தயா நோ ம்ருட ஜீவஸே |
இமாகும் ருத்ராய தவஸே கபர்திநே க்ஷயத்வீராய
ப்ரப்ராமஹே மதிம் | யதா ந: சமஸத்-த்விபதே
சதுஷ்பதே விச்வம் புஷ்டம் க்ராமே அஸ்மின்
னனாதுரம் | ம்ருடா நோ ருத்ரோத நோ மயஸ்க்ருதி
க்ஷயத்வீராய நமஸா விதேமதே | யச்சஞ்சயோச்ச
மனுராயஜே பிதா ததச்யாம தவ ருத்ர ப்ரணீதெள |
மா நோ மஹாந்தமுத மா நோ அர்ப்பகம் மா ந
உக்ஷந்த முத மா ந உக்ஷிதம் । மா நோ வதீ: பிதரம்
மோத மாதரம் ப்ரியா மா நஸ்தனுவோ ருத்ர
ரீரிஷ: | மா நஸ்தோகே தன்யே மா ந ஆயுஷி மா
நோ கோஷு மா நோ அச்வேஷு ரீரிஷ: | வீரான்

மா நோ ருத்ர பாமிதோரவ்தீர் ஹவிஷ் மந்தோ
நமஸா விதேம தே | ஆராத்தே தோக்ன
உதபூரஷுக்னே க்ஷயத்வீராய ஸும்னமஸ்மேதே
அஸ்து | ரக்ஷா ச நோ அதிச தேவ ப்ருஹ்ய தா
ச ந: சர்ம யச்சத்விபர்ஹா: | ஸ்துஹிச்ருதம்
கர்த்தஸதம் ய்யுவானம் ம்ருகந்ந பீமமுப
ஹத்னுமுக்ரம் | ம்ருடா ஜரித்ரே ருத்ர ஸ்தவாணோ
அன்யந்தே அஸ்மந் நிவபந்து ஸேனா: | பரிணோ
ருத்ரஸ்ய ஹேதிர் - வ்ருணக்து பரித்வேஷஸ்ய
துர்மதி ரகாயோ: | அவ ஸ்திரா மகவத்ப்
யஸ்தனுஷ்வ மீட்வஸ் தோகாய தனயாய ம்ருடய |
மீடுஷ்டம சிவ்தம சிவோநஸ் ஸுமனா பவ | பரமே
வ்ருக்ஷ ஆயுதந் நிதாய க்ருத்திம் வ்வஸான ஆசர
பினாகம் பிப்ரதாக்ஹி | விகிரித விலோஹித
நமஸ்தே அஸ்து பகவ: | யாஸ்தே ஸஹஸ்ர
ஹேதயோன்யமஸ்மந் நிவ்பந்து தா: |

ஸஹஸ்ராணி ஸஹஸ்ரதா ப்ாஹூ வோஸ் தவ

ஹேதய்:| தாஸாமீ சானோ பகவ: பராசீனா முகா

க்ருதி|

ஸஹஸ்ராணி ஸஹஸ்ரஷோ யே ருத்ரா அதி

பூம்யாம்|தேஷாகும் ஸஹஸ்ரயோஜனேவ தன்வானி

தன்மஸி | அஸ்மின்-மஹத்யர்ணவேந்தரிக்ஷே

புவா அதி | நீல்க்ரீவா: சிதிகண்டா: ஷர்வா அத:

க்ஷமாசரா:| நீல்க்ரீவா: சிதிகண்டா திவகும் ருத்ரா

உப்ச்ரிதா: | யே வ்ருக்ஷேஷ்ஷூ ஸஸ்பிஞ்ஜரா

நீல்க்ரீவா விலோஹிதா: | யே பூதானா

மதிபதையோ வசிகாஸ கபூர்த்தின்: | யே

அன்னேஷூ விவித் யந்தி பர்தரேஷூ பிப்தோ

ஜனான்:| யேபுதாம்பதிரக்ஷய ஜலப்ருதா யுவ்யுத:|

யே தீர்த்தானி ப்ரசரந்தி ஸ்ருகாவந்தோ

நிஷுங்கிண: | ய ஏதாவந்தச்ச பூயாகும் ஸச்ச

திஷே்ா ருத்ரா விதஸ்திரே | தேஷா்கும் ஸஹஸ்ரயோஜனேவ தன்வா்னி தன்மஸி | நமோ் ருத்ரேப்யோ யே ப்ருதிவ்யாம் யே்ந்தரிக்ஷே யே திவி யேஷாமன்னம் வ்வாதோ் வர்ஷமிஷ்வஸ் தேப்யோ தசப்ராசீர்தச் தக்ஷிணா தச் ப்ரதீசீர் தசோதீசீர் - தசோர்த்வாஸ் தேப்யோ நமஸ்தே நோ் ம்ருடயந்து தேயந்த்விஷ்மோ யச்ச் நோ த்வேஷ்டிதம் வ்வோ ஜம்பே் ததாமி|

த்ரய்ம்பகம் யஜாமஹே ஸுகந்திம் ப்ுஷ்டி வர்த்தனம்| ஊர்வாருக மிவ பந்தனான் ம்ருத்யோர் ம்ுக்ஷீ்ய மாம்ருதாத்| யோ ருத்ரோ அக்னௌயோ அப்ஸுய ஓஷ்தீ்ஷு யோ ருத்ரோ விச்வா புவ்னா விவேஸ தஸ்ம்ை ருத்ராய நமோ் அஸ்து | தம்ுஷ்டுஹி யஸ் ஸ்விஷுஸ் ஸுதன்வா யோ விச்வ்ஸ்ய க்ஷய்தி பேஷஜஸ்ய் | யக்ஷ்வா்மஹே

ஸௌமனஸாய் ருத்ரன் நமோ பிர்தேவமஸூரன்து வஸ்ய | அயம் மே ஹஸ்தோ பக்வானயம் மே பக்வத்தர: | அயம் மே விச்வபேஷஜோயகும் சிவாபிமர்சன: | யேதே ஸஹஸ்ரமயுதம் பாசா ம்ருத்யோ மர்த்யாய ஹந்தவே | தான் யஜ்ஞஸ்ய் மாயயா ஸர்வானவ் யஜாமஹே | ம்ருத்யவே ஸ்வாஹா ம்ருத்யவே ஸ்வாஹா | ஓம் நமோ பகவதே ருத்ராய விஷ்ணவே ம்ருத்யுர்மே பாஹி|

ப்ராணான க்ராந்திரஸி ருத்ரோ மா விசாந்தக: | தேனான்னேனா ப்யாயஸ்வ | ஓம் நமோ ருத்ராய விஷ்ணவே ம்ருத்யுர் மே பாஹி| ஸதாசிவோம் ||

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||

**குறிப்பு:-** இந்த ஸ்வரங்களை முறைப்படி நன்கு அறிந்தவர்களிடம் உச்சரிக்கத் தெரிந்து கொள்ளவும்.

